ப்படிபோல ஆத்மசந்நிதானத்தில் சேஷ்டிக்கப்பட்டசெகத்ஸ்பாவமா
னவிகாரங்கள் ஆத்மாவைப்பரிசிக்கமாட்டாது ஆதலால் நிர்விகாரத்வ
ங்கூடும்

ச-கை- அறவிந்தவிசாரத்திற்குப்பலமேதென்னில்

உ-ம்- தேரோட்டிவைக்குமிடத்திலும் அதற்கதிகாரிகளாற்செய்யப்பட்டு
த்தேரோட்டிவைக்கிறேனென்கிறவியாபாரவபிமானத்தினால் அவர்கட்
குநியமிக்கப்பட்டுச்சொஸ்தனாயிருக்கிறபிரபுவினிடத்தில நாலிரண்டு
நாழிகையில் தேரோட்டினவை தேனென்றெப்படி தோற்றுகின்றதோ
அப்படிபோல, ராகத்துவேஷசுபாவமானகர்த்ருத்வமும் அத்தியாசத்
தினால் ஆத்மசுபாவமாய்த்தோற்றுகின்றது விசாரிக்குமிடத்தில் ஆத்
மாவுக்குச்சர்வாத்மனாயில்லை ஆகையால்நிராகாரமாய் நிர்விகாரனான
ஆத்மாவேதானென்று ஸ்ரீ சற்குருகடாக்ஷத்தினால்தெளிந்து ஆத்மசந்
நிதானத்தில் திரிவிதகரணத்துண்டானகர்த்தவ்வியமும் அதனால்வி
ளைகிறவினையும் முக்கியபலமும் அவாந்தரபலமும்சுவபக்ஷமாய்சங்கை
யறவெவனறிகிறனோ அவனேசிவன்முத்தனென்றுசுருதிஸ்மிருதியா
திகளிற்சொல்லுகின்றது இதிற்சம்சயமில்லைசித்தம,

கர்மத்திரயநிருபகம்-முற்றிற்று.

---

ஏழாவது

# இராகத்துவேஷநிருபகம்.

---

ச-கை- திரிவிதகரணங்களுமனத்தராகத்துவேஷாதிகளால் பிரேரிக்கப்ப
ட்டுத் திரிவிதகர்மங்களைச்செய்கின்றது அதுகளெத்தனைவிதமாயிருக்
குமென்னில்,

உ-ம்- இராகம்துவேஷம்காமம்குரோதம்லோபம்-மோகம் மதம் மச்சரம்
இரிஷைஅசூயை டம்பம் தர்ப்பம் அகங்காரம் இச்சைபத்திராத்தை
எனப்பதினாறுவிதமாயிருக்கும்,

ச-கை- அவைவெவ்வாறென்னில்.

உ-ம்- ஸ்திரீவிஷயமானசித்தவிருத்திக்குராகமென்றும், ஒருவனபகாரம்ப
ண்ணினால்அவ்வபகாரத்திற்குப்பிரதியபகாரம்பண்ணவேண்டுமென்கி
றசித்தவிருத்திக்குத்துவேஷமென்றும், கிரகக்கிராமக்ஷேத்திரதனதா
ன்யாதிகள்மேலுமேலுஞ்சம்பாதிக்கவேண்டுமென்றுவருகிற சித்தவி

ருத்திக்குக்காமமென்றும் தான்சம்பாதிக்கின்ற ஒருவஸ்துவினிடத்தி
ல் எவனொருவன்விக்கினம்பண்ணுகிறானோ அவன்மேரில்வியாக்கிராம
ரூபமாய்ச் சீறிவருகிறசித்த விருத்திக்குக்ரோதமென்றும், அங்ஙனம்பி
ரயாசையடைந்து சம்பாதித்தபொருள்களை எந்தவிதத்திலுஞ் செ
லவுபண்ணப்படாதென்றுவருகிற சித்தவிருத்திக்கு லோபமென்றும்
தான்சம்பாதித்தபதார்த்தத்தினிடத்தில் பிரியமோதப்பிரமோதமாய்
வருகிறசித்த விருத்திக்குமோகமென்றும், ஐசுவரியகோலாகலத்தி
ற்கெர்வித்து கிர்த்தியாகிர்த்தியங்களறியாமல் விகற்பித்துவருகிற சித்
தவிருத்திக்குமதமென்றும், ஒருவன்தன்னிலும்அதிகபாக்கியவந்தனா
யிருந்தால் அவன்செல்வத்தைப்பார்க்கச்சகிக்காமல் வருகிறசித்தவிரு
த்திக்குமச்சரமென்றும், பிறருக்குத்துக்கம் வரவேண்டுமென்றும் த
னக்குவரக்கூடாதென்றும் எண்ணுகிறசித்தவிருத்திக்கு இரிஷையெ
ன்றும், தனக்குச்சுகம்வந்ததுபோல மற்றொருத்தருக்கு வரக்கூடாதா
வென்று விகற்பித்துவருகிறசித்தவிருத்திக்குஅசூயையென்றும்,தான்
செய்யப்படுகிறதானதர்மங்களைப்பலபேருமறிந்து தன்னைச்சபாசென்
றுமெச்ச வேண்டுமென்றுவருகிற சித்தவிருத்திக்கு டம்பமென்றும்
நானேதொட்டவான்மற்றவர்களெல்லாம் எனக்குச்சரியாவார்களாவெ
ன்றெண்ணுகிறசித்த விருத்திக்குத்தர்ப்பமென்றும், ஆ என்னையறியா
யா நீயாஎன்னைத்தெண்டிக்கிறவன் நான்பிடித்தகாரியத்தை விடுகிற
தில்லை யென்றுவிகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு அகங்காரமென
றும் ஆசிர்வாச்சியமானசவுசாதிகிரியைகளைச் செய்யவேண்டுமென்று
வருகிறசித்தவிருத்திக்குஇச்சையென்றும் குருதேவதைகளிடத்தில்
வருகிறபிரீதிக்குப் பத்தியென்றும் குருவேதாந்த வாக்கியாதிகிரியை
களிடத்தில் வருகிறவிசுவாசத்திற்குச்சிரத்தையென்றுஞ்சொல்லப்ப
டும்.

௪-கை. இங்ஙனம்விசாரிக்குமுறைமையேதென்னில்.

உ-ம்-இந்தராகத்துவேஷாதிகள் நிரோதகமாய் பெத்தனம்பண்ணுமவை
ரும் ஆயினும் இராகமுதலகங்காரமீறான பதின்மூன்றின் வசத்தனாய்
ஒருபுருஷன்திரிவிதகரணங்களினாலும்திரிவிதகர்மங்களைச் செய்வானா
கில் அவனுக்குநரகத்திலிருந்துநிவிர்த்தியெந்தக்காலத்திலுமில்லையோ

ரீ

யில்லை, ஆதலால்இராகத்துவேஷாகாரமானசித்தவிருத்திகளைத் திருப்
பிச்சர்வப்பிரகாரத்தினுலேயுஞ் சிரத்தாபத்திரூபமாகச்செய்வானுகில்
அவன்கிரமத்தினுல் சீக்கிரமாகச்சமுசாரபந்தத்திலிருந்து விடுபட்டு
முத்தனுவான் ஆகையினுல் சிரத்தாபத்திகளேயவசியஞ் சம்பாதிக்க
வேண்டும் இச்சையினுற் செய்யப்பட்டபசிதாக நிவிர்த்தியும்பலமூத்
திரவிசர்ச்சனமுஞ் செய்யாமற்போனுல் தற்காலத்திற்குவாதைவரும்
செய்ததேயுண்டானுல் தற்காலத்திற்கு உபாதிநிவிர்த்தியாம்இதுகளா
ல்சொர்க்கநரகப்பிராப்தியில்லை யென்றறியவேண்டியது.

சங்கை-இப்படிவிசாரித்ததற்குப்பலமேதென்னில்-

உ-ம்-சுழுத்தியவஸ்தையிலும் தூஷணீம் பூதாவஸ்தையிலும் சமாதிய
வஸ்தையிலும் இராகத்துவேஷாதிகளில்லாதபடியினுல்கர்மமில்லை சாக்
கிரசொப்பனங்களில் அதுகளுண்டாயிருக்கிறபடியினுல் கர்மமுண்டு,
ஆதலால் இராகாதிகளின்கின விடத்திற்கர்மமில்லை அதுகளுண்டானவி
டத்திற்கர்மமுண்டென்று அன்வயவெதிரேகத்தினு லறியவேண்டியது.

சங்கை. இந்தராகத்துவேஷாதிகளெதினுல்வருகிறதென்னில்

உ-ம்- அபிமானத்தினுல்வருகின்றது.

சங்கை சமஸ்தமானபேர்களுக்கும்அபிமானபூர்வகமாகப்பிரவிர்த்திவருமா
வென்னில்.

உ-ம் வரும்.

சங்கை- அதெப்படியென்னில்.

உ-ம்- ஸ்திரிஜனங்களுக்கு நான்ஸ்திரீயென்று எப்போதபிமானம் வரு
கின்றதோ அப்போதேராகாதிபூர்வகமாய் புருஷனிடத்திலியருவைசு
களிலும் கிரகசவரட்சணைகளிலும் பாகாதிக்கிரியைகளிலும் தனதா
ன்யாதியார்ச்சிதங்களிலும் பிரவிர்த்திகாணப்படுகின்றது,அதுபோல
புருஷாளுக்கும் நான்புருஷனென்றெப்போதபிமானம்வருகிறதோ அப்
போதே ராகாதிபூர்வகமாய்நாராதிகிரயக்கிருஷியாதிகளிலுந்தனதான்
யாதியார்ச்சனைகளிலும்பிரவிர்த்திகாணப்படுகின்றது அப்படியேசம
ஸ்தபிராணிகளுக்கும்வருணசிரமதர்மாபிமானத்தினுலும் வியவகாரவி
யாபாரங்களினுலும்ராகாதிகளுண்டாகின்றது இதுகளுண்டாகிறதற்
கு அபிமானமேகாரணம் ஆகையினுல்முமுக்ஷுக்களானவர்கள் வாதியாசி
ரமநாமரூபக்கிரியைகளாகிற விஷயங்கள்தானல்லாதபடியினுல்சகலவ
ஸ்துக்களிடத்திலும் ருடமான அபிமானத்தைத விடவேண்டும் அப்ப
டிவிட்டால் துக்கத்தினிடத்தி லிருந்துவிடுபடுவார்களென்றறியவேண்டி

உ-ம், சோபனமென்றுமுச்சவமென்றுஞ்சந்தையென்றுமனேக வஸ்துசமுகத்திற்கந்தப்பெயரெப்படி வந்ததோ அதுபோல அசர்வஜன்னியமானதேகேந்திரியாதிசங்கத்திற்குத் தொழில்விவகாரத்தினிடத்தில் ஐதீகமேபிராமணனென்றுபெயர் அதுபோலக்ஷத்திரியனென்றும்வைசியனென்றுஞ்சூத்திரனென்றும் ஸ்திரீயென்றும் புருஷனென்றுந்தீட்சத னென்றுஞ்சாஸ்திரியென்றும் புராணிகனென்றும் அவதானியென்றும்ஜீயனென்றும்பாகவதனென்றும் தமிழனென்றும் கர்ணாடகனென்றும் இதுமுதலானசமஸ்தநாமங்களுந்தே கேந்திரியாதிசங்கவிஷயத்தினாலைதீகமாய் வருகிறபடியினால்பிராமணத்துவம் தேகேந்திரியாதிசங்கத்திற் கேயல்லாமலாத்மாவுக்குக்காலத்திரயத்திலுமில்லை இப்படிபகுத்தறியாமலிருக்கிறதேயவிவேகம் இந்தவவிவேகத்தினாலபிமானம்வருகின்றது.

ச-கை. இப்படிவிசாரித்தற்குப்பலமேதென்னில்.

உ-ம்-ஆத்மாவுக்குக்காலத்திரயத்திலும் பிராமணத்வாதிகளில்லையென்றும்தேகேந்திரியாதிகளுக்கேஐதீகபிராமணத்வாதிகளென்றுமறிவதேபலம்.

ச-கை இந்தஅவிவேகமெதினால்வந்ததென்னில்.

உ-ம். அஞ்ஞானத்தினால்வந்தது.

ச-கை. அஞ்ஞானசொரூபமேதென்னில்,

உ-ம்-தன்னைத்தானறியாமலிருக்கிறதேயஞ்ஞானம்.

ச-கை தன்னைத்தானறியார்களென்று சொல்லலாமாவென்னில்,

உ-ம் சொல்லலாம்எப்படியென்றால்நான்பிராமணன்நான்க்ஷத்திரியன்நான்வைசியன்நான்சூத்திரன்நான்இந்தக்குலத்திற்பிறந்தவன்நான் இன்னகோத்திரனென்றுஇந்தச்சரீரத்தையே யாத்மாவாகவறிகிறார்களேயல்லாமல்சரீரவன்னியரானஆத்மாவையாருமறியமாட்டார்கள்.

ச-கை- சாஸ்திரிமார்கள்சரீரவன்யமான ஆத்மாவுண்டென்றுசொல்லியிருக்க, யாருமறியார்களென்றெப்படிசொல்லலாமெனில்,

உ-ம் சொல்லலாம்எப்படியென்றால்கர்த்தாபோக்தாவாய்பரிச்சின்னனாய் காலாந்தரத்தினாற்பிறந்திறக்கப்பட்ட ஜீவனையாத்மவாகவறிகிறார்களேயல்லாமல் அகர்த்தா அபோக்தா அபரிச்சின்னன் அசங்கன் அசம்சாரி அத்துவிதனென்னப்பட்டவேதாந்தவேத்தியனை பிரத்தியேகாத்மா

ச-கை, போனால்போகட்டுமேயென்னில்.

உ-ம், ஆத்மத்தியை பிரதிபாதிக்கிற சுருதிகளுக்குப்பேதம்வரும்.

ச-கை, ஆனால் அபின்னமென்றுசொல்லலாமேயென்னில்.

உ-ம், மாயைக்குச் சேதனத்துவமுண்டாகி அசேதனத்துவ நீங்கிவிடும் ஆத்மாவுக்குஞ் சேதனசேதன சொரூபம்வரும் அப்போதுமாயையென்றுசொல்லாமல் ஆன்மாவென்று சொல்லவேண்டும்,

ச-கை, அப்படிசொல்லுவேமேயென்னில்,

உ-ம், மாயை பிரகிருதி பிரதானம் அவித்தை பிரளயம் தமசு மகாசுழுத்தி அஞ்ஞானமென்று ஆத்மப்பிரதிபாதகத்திற்கன்னியமானசத்தங்களினாற் சொல்லுகிறபடியாலாத்மாவென்று சொல்லக்கூடாது.

ச-கை, ஆனால்பின்னாபின்னமென்று சொல்லுவோமேயென்னில்.

உ-ம், அப்படியுஞ்சொல்லப்படாது.

ச-கை, எப்படிதான்சொல்லலாமென்னில்.

உ-ம், அநிர்வசனீயமென்றேசொல்லவேண்டும் அந்த அநிர்வசனீயமான அஞ்ஞானத்தினாலவிவேகமும்அதனாலபிமானமும்அதனால்ராகத்துவேஷாதிகளும் அதனாற்கன்மமும் அதனாற்சரீரமும் அந்தச்சரீராபிமானத்தினால் துக்கமும்வருகின்றது.

ச-கை- அந்தத்துக்கத்திற்கு அத்தியந்தநிவிர்த்தியெப்போதுவருமென்னில்.

உ-ம்- சர்வாத்மனுய்ச்சரீரபரிக்கிரகமில்லாமற்போனால்வரும்-

ச-கை- சரீரபரிக்கிரகஞ்சர்வாத்மனுயெப்போதுபோமென்னில்-

உ-ம்- ராகத்துவேஷங்கள்போனாற்போம்-

ச-கை- அவையெப்போதுபோமென்னில்-

உ-ம்- அபிமானம்போனாற்போம்.

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்- அவிவேகம்போனாற்போம்,

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்-அஞ்ஞானம்போனாற்போம்,

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்- சர்வாத்மனுய்அத்துவிதப்பிரமாமிக்கப்பிரத்தியக்ஷஞானம்வந்தாற்போமன்றிமற்றோருபாயத்தினாலும்போகாது,

ச-கை-கன்மத்தினலஞ்ஞானம்போமென்றுசொல்லாமேயென்னில்,

வதா ஆத்மாநாத்மவிசாரம்பண்ணவேண்டும் அப்படியில்லாமல் சம்
சயவிபரீதபாவனைநீங்காத வாசாஞான ஆசிரியரும்தத்துவத்தைப்பிறி
த்துநிர்க்குணபாவத்தை அறிவிக்கமாட்டாதவரும்நிஷ்களத்திற்செல்
லவுமடையவும் வழிகாட்டமாட்டாதவரும் டம்பவேஷமுடையவரும்
கொக்கைப்போலசையாதிருந்து கனியமித்தியம்பரிசம்பண்ணுகிறவ
ரும் மந்திரலய அட யோகங்களி லொருலக்ஷியத்தைச்சொல்லி அதிற்
பழகப்பழக அந்தக்கரணவிருத்திகுவியமும் உபசாந்தமயக்கமுமுண்
டாவதையே பொருளென்றறிவிக்கப்பட்டவருமாகிய ஆசிரியராலு
ம்பிறர், கழுதைவாலைப் பிடித்துக்காவேரிக்கரையேறக்கூடாதுபோ
லவும்செல்லாதகாசுநோட்டக்காரருக்குச்செல்லாதுபோலவும்சித்திர
சூரியனாலந்தகாரம்போகாதுபோலவும் அனுபவமேதிருமேனியாகாத
குருசேவையினாலஞ்ஞானம்போகாதுசம்சயமுநீங்காதென்றுசகலவே
தாந்தங்களுஞ் சொல்லப் படுகின்றது, ஆகையினால் சொப் பிரகாச
சொரூபமே திருமேனியாகிய காரணகுருவை நம்பினால் அப்ப
டிநம்பினசீஷனைவீட்சித்து அவனுடைய அஞ்ஞானமும் அதனால்வ
ரும் அவிவேகமும் அதனால்வருங்கன்மமும் அதனால்வருஞ்சரீரமும்
அதனால்வருந்துக்கமும் அத்தியாசத்தினாலாரோபிதமானதென்று சந்
தேகவிபரீதமற உள்ளங்கைநெல்லிக்கனிபோலனுபவமாயெடுத்தறிவி
ப்பார் அப்படியறிவித்தவிடத்தில் அவன்சமுசாரத்திலிருந்துவிடுபட்
டுச்சீக்கிரமாகச் சிவன்முத்தியத்தைப்பெறுவானென்று சகலசுருதி
ஸ்மிருதியிதிகாசபுராணாதிகளிலுஞ் சொல்லப்படுகின்றது இதிற்சம்
சயமில்லை சித்தம்.

இராகத்துவேஷநிரூபகம்-முற்றிற்று.

எட்டாவது.

## ஆத்மாநாத்மவிசாரநிரூபகம்.

ச-கை. ஆத்மாநாத்மவிசாரம் பண்ணவேண்டுமென்று சுருதியாதிகளிற்
சொல்லுகின்றபடியால் ஆத்மாவாவதேதென்னில்.

உ-ம். சரீரத்திரயத்திற்கும்பஞ்சகோசத்திற்குமன்னியமாய் அவஸ்தாத்
திரயத்திற்குச் சாட்சியாயிருக்கிறசச்சிதானந்த சொரூபமேயாத்மா
வென்றுசொல்லப்படும்.

ச-கை. அநாத்மாவாவதேதென்னில்.

ச-னை- ஆனால் எந்தவுபாதியினாலீஸ்வரத்வமு மெந்தவுபாதியினாற் சீவத்வமும் வருகிறதென்னில்.

உ-ம்- சமஷ்டி சரீரவுபாதித்திரயத்தினா லீஸ்வரத்துவமும் வியஷ்டி சரீரவுபாதித்திரயத்தினாற் சீவத்துவமும் வருகின்றது

ச-னை- ஈஸ்வரனுக்குச் சமஷ்டி காரணசரீரமாத்திரம் போதாதோ வென்னில்

உ-ம்- போதாது

ச-னை- சமஷ்டிஸ்தூலசூட்சுமசரீரங்களேன் சொல்லவேண்டுமென்னில்

உ-ம் உபாசனைநிமித்தியமாய்ச் சொல்லப்படுகின்றது.

ச-னை- அதெப்படியென்னில்

உ-ம்- முக்கிய அதிகாரியானவர்களுக்குச் சமஷ்டிகாரணசரீரவுபாசகரான ஆத்மாவையே யுபாசிக்கப்படுமென்று சொல்லப்படும் இவருக்கே ஈஸ்வரனென்றும் அந்தரியாமியென்றும் அவ்வியாகிருதனென்று மூன்றுபெயர்,

ச-னை- இவருக்குச் சமஷ்டிகாரண சரீரத்தில் அபிமான முண்டோ வில்லையோ வென்னில்

உ-ம்- அபிமானமகங்காரதர்மமானபடியினா லவ்வவஸ்தையி லகங்காரமில்லை ஆனதினாலபிமானமுண்டென்று சொல்லக்கூடாது.

ச-னை- பின்னை எப்படியென்னில்.

உ-ம்- ஆத்மாவுக்குச் சமஷ்டிகாரண சரீரவிசிட்டமாத்திரத்துவமே ஈஸ்வரத்துவமென்று சொல்லவேண்டும் இந்த ஈஸ்வரனை யுபாசிக்கவல்லமையில்லாதவர்களுக்கு அவ்வீஸ்வரனுக் கந்தர்க்கதமான சமஷ்டி சூட்சுமசரீரவுபாதிகனே ஈஸ்வரனென்றுபாசிக்கும்படி சுருதி சொல்லுகின்றது, அவ்வீஸ்வரனுக்கிரணியகர்ப்பனென்றுஞ் சூத்திராத்மாவென்றும் பிராணனென்றும் மூன்றுபெயர்.

ச-னை- இவருக்குச் சூட்சுமசரீரத்திலபிமானமுண்டோ வில்லையோவென்னில்.

உ-ம்- அபிமானத்திற்காசிரயமான ஸ்தூலசரீரமில்லாதபடியினால் அபிமானமுண்டென்று சொல்லக்கூடாது.

ச-னை- பின்னை என்னவென்னில்.

களை யுபாசிக்கின்றார்களோ அந்தந்த மூர்த்திவழியாக அந்தரியாமி
யான ஈசுவரனையேயுபாசிப்பதாகும்,

ச-கை-இந்தமூர்த்திகளையுபாசிக்கவேண்டுமென்று சொல்லுகிற சுருதிக
ளுக்குத்தாற்பரியமேதென்னில்

உ-ம்-துவாராத்துவாரா அந்தரியாமியான சொரூபத்தையே யறியவே
ண்டுமென்றுதாற்பரியம் இப்படியேயாத்மாவுக்குச்சமட்டிசரீரத்
திரயவுபாதியினாற்சிவத்துவமும்வந்தது

ச-கை-சிவத்துவத்துக்குச்சரீரத்திரயம்வேண்டுமாவென்னில்.

உ-ம் வேண்டும்சிவன் அந்தக்கரணபிரதிவிம்பனாகையினால் சூட்சுமசரீ
ரம்வேண்டும் ஸ்தூலசரீரமில்லாவிட்டாலகர்த்தாருத்வங் கூடாதப
டியினால் ஸ்தூலசரீரம்வேண்டும்காரியமான ஸ்தூலசூட்சும சரீர
ங்களுக்காரணத்தைவிட்டிராதபடியினால் இவ்விரண்டுக்குங் காரண
மான்காரணசரீரமும்வேண்டும்,

ச-கை-சிவனுக்குச்சரீரத்திரயத்தி லபிமானமுண்டோ வில்லையோவென்
னில்

உ-ம்-அபிமானமில்லாமற்கர்த்ருத்வங்கூடாதபடியினால்உண்டு.

ச-கை-ஆனால்இந்தச்சிவனுக்கெந்தப்பேரென்னில்

உ-ம்-சாக்கிராவஸ்தையில் வியஷ்டிஸ்தூலசரீரத்தி லபிமான கர்த்தாவா
னசிவனுக்கு விசுவன்வியவகாரிகன் சிதாபாசனென்றுமூன்றுபெ
யர் சொப்பனவஸ்தையில்வியஷ்டி சூட்சுமசரீரத்திலபிமான கர்த்
தாவான சிவனுக்குத்தைசதன் பிராதிபாதிகன் சொப்பன கற்பித
னென்றுமூன்றுபெயர், சுழுத்தியவஸ்தையில்வியஷ்டிகாரணசரீர
த்திலபிமானகர்த்தாவான சிவனுக்குப்பிராஞ்ஞன் பாரமார்த்திகன்
அவிச்சின்னனென்றுமூன்றுபெயர்

ச-கை-ஒரு ஆத்மாவுக்கே ஈஸ்வரத்வமென்றுஞ் சிவத்துவமென்றும் இர
ண்டுரூபமெப்படிகூடுமென்னில்.

உ-ம்-கூடும் திருஷ்டாந்தத்திலொருதேவதத்தனுக்கே புத்திரனையபேக்ஷி
த்துத்தகப்பனென்றும் பேரனையபேக்ஷித்துப்பாட்டனென்றும்வ
ந்ததுபோல ஒரு ஆத்மாவுக்கே வியஷ்டியுபாதியையபேக்ஷித்துச்
சிவனென்றுஞ் சமஷ்டியுபாதியையபேக்ஷித்து ஈஸ்வரனென்றும்
சொல்லப்படும்.

ச-கை - தகப்பன் பாட்டனென்று சொல்லுகிற தர்மத்தை யுடைய
தேவதத்தனிடத்திற்கிஞ்சிக்ஞத்வசர்வஞ்ஞத்வ [illegible]

ம்சிவத்வவீஸ்வரத்வதர்மங்களுடன் கூடியிருக்கிற ஆத்மாவினிடத்தில்கிஞ்சிக்ஞத்வசர்வக்ஞத்வவுபாதிகள் காணப்படுகிறபடியினால் அந்தத்திருஷ்டாந்தமெப்படிகூடுமென்னில்.

உ-ம், ஒரு ஆத்மாவுக்கே யிரண்டுபாதியினாலீஸ்வரத்வமுஞ்ஜீவத்வமும் வருமென்பதற்காகத்தேவதத்தத்திருஷ்டாந்தஞ்சொன்னோம் இனி மகத்வவுபாதியினால் ஆத்மாவுக்குச் சர்வக்ஞத்வமும் அனுத்வவுபாதியினால்கிஞ்சிக்ஞத்வமும் வரலாமென்பதற்குமொரு திருஷ்டாந்தஞ்சொல்லுகிறோம்.

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், விஸ்தாரமான ஜெலத்திற்கு ஏரியென்றவுபாதியிலனேகதானிய முதலானதுகளை விளைவிப்பதற்கும் சமஸ்தபிராணிகளுக்குஞ்ஸ்நானபானாதிக்கிரியைகளைச் செய்விப்பதற்குஞ்சாமர்த்தியமுண்டு, அற்பமான ஜெலத்திற்குக்கடமென்றவுபாதியினால் ஸ்நானபானாதிமுதலானகிரியைகளுக்குமாத்திரம் உபயோகப்படுஞ்சாமர்த்தியமுண்டு, பின்னுமொரு அக்கினிக்கே தீவட்டியென்றவுபாதியினால் தூரமாயிருக்கிறபதார்த்தங்களைத் தெரியச்செய்கிறசாமர்த்தியமும் விளக்கென்றவுபாதியினால்சமீபத்திலிருக்கிற பதார்த்தங்களைத் தெரியச் செய்கிறசாமர்த்தியமுமுண்டு அதுகளைப்போல ஒரு ஆத்மாவுக்கே மகத்வமாகியசமஷ்டிசரீரவுபாதியினால் சர்வக்ஞத்வமும் அனுத்வமாகியவியஷ்டி சரீரவுபாதியினால்கிஞ்சிக்ஞத்வமும்வரும் அதனாலீஸ்வரத்வம் ஜீவத்வமென்று பேதம்வந்தது, பாரமார்த்திகத்திலீசனீஸ்வரனுக்கு அபேதமேயன்றிப் பேதமில்லையென்று சுருதியாதிகளிற்சொல்லுகின்றது.

ச-கை, விருத்ததர்மத்திற்கூடியிருக்கிறஜீவேஸ்வரனுக் கெப்படியபேதங்கூடுமென்னில்,

உ-ம், கூடும், பூர்வதிருஷ்டாந்தத்தில்விருத்ததர்மத்துடன்கூடிய ஏரியென்றவுபாதியோடுசேர்ந்திருக்கிற ஜெலத்திற்குங்கடமென்றவுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜெலத்திற்கும்விருத்தாமிசைகளானவேரி கடமென்றவுபாதிகளைவிட்டு அவிருத்தாமிசைகளான ஜெலத்தினால் ஏகத்வஞானம்வருகிறதுபோலவும், விருத்ததர்மத்துடன்கூடிய தீவட்டியென்றவுபாதியோடுசேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விளக்கென்றவுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விருத்தாமிசைகளானபெரியவர்த்தி சின்னவர்த்தியென்ற வுபாதியைவிட்டு அவிருத்தாமிசையான அக்கினிமாத்திரத்தினால் ஏகத்வஞானம்

வருகிறதுபோலும் விருத்தகர்மமானசர்வஞ்ஞத்வாதிகளுடன்கூடி யிருக்கிற சிவனுக்கும் விருத்தாம்சைகளான சர்வஞ்ஞத்வகிஞ்சிஞ் ஞத்வவுபாதிகளைவிட்டு அவிருத்தாம்சைகளானசைதன்ய மாத்தி ரத்திற்கு ஏகத்துவஞானங்கூடும், இந்தஅர்த்தமே சகலசாஸ்திரங்க ளிலுஞ்சோயந்தேவதத்தனென்கிறதிருஷ்டாந்த பூர்வமாய்மகாவா க்கியத்திற்குஜகல்லட்சணை அஜகல்லட்சணை ஜகதஜகல்லட்சணைக ளால்சுருதியாதிகளில்அர்த்தஞ்சொல்லப்படுகின்றது ஆதலால்இந்த ப்படிசொப்பிரகாசமேதிருமேனியானசற்குருவினால் விசாரித்து தானேபிரமமென்றும்நானேயீஸ்வரனென்றும் சம்சயமில்லாமலு ம் உபாதியானவகப்பாவமில்லாமலும் எவரறிகிறார்களோஅவர்க ளேசீவன்முத்தரென்று சுருதிஸ்மிருதியாதிகளிற்சொல்லப்படுகி ன்றது இதிற்சம்சயமில்லைசித்தம்.

ஆத்மாநாத்மவிசாரநிரூபணம்-முற்றிற்று.

---

ஒன்பதாவது.

# சரீரத்திரய விலக்ஷணநிரூபணம்.

---

சி-ஷை, ஆத்மாசரீரத்திரயவிலட்சணனென்றுசுருதிகளிற்சொல்லுகிற படி, சரீரத்திரயவிலட்சணனான ஆத்மாவைச்சரீரத்திரயங்களைய றியமல அறியப்படாதாகையினால் சரீரத்திரயமெவையென ன்னில்

உ-ர், ஸ்தூலசூக்ஷ்மகாரணமென மூன்றுசரீரங்களாம்.

சி-ஷை, இவற்றுள்ஸ்தூலசரீரமாவதேதென்னில்.

உ-ர், கரசரணாவயவங்களாய்ப்பஞ்சபூதங்களாற்றோற்றப்பட்டது.

சி-ஷை, சூக்ஷ்மசரீரமாவதேதென்னில்,

உ-ர், பதினேழுஅவயவங்களுடன்கூடியிருக்கப்பட்டது,

சி-ஷை, காரணசரீரமாவதேதென்னில்,

உ-ர், அஞ்ஞானமேகாரணசரீரம்,

சி-ஷை, இதுகளுக்குச்சரீரமென்றுபெயரேதினால்வந்ததென்னில்,

உ-ர், சீரணித்துப்போகிறபடியினால்சரீரமென்றுபெயர்வந்தது.

ச-கை, சீரணித்துப்போகின்றதாவென்னில்,

உ-ம், போகின்றது அதைவிருத்திபூர்வகமாய்ச்சொல்லக்கேள்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், இந்தஸ்தூலசரீரம் இளமையினாலும் நோயின்மையினாலும் அன்னஞ்சமமானதினாலும் விருத்தியாகின்றது அன்னமில்லாமையினாலும் அன்னமதிகமானதினாலும் வியாதியினாலும் முதுமையினாலும் சீரணமாகின்றது,

ச-கை, சூட்சுமசரீரமெப்படியென்னில்,

உ-ம், ஏகத்தாவேஷாகாரமாய்ப்பரிணமிக்கிறது விருத்தி-அவற்றின் சங்கோசமே சீரணத்துவம்,

ச-கை, ஆனந்தகாரணசரீரமெப்படியென்னில்,

உ-ம், அகமதாதியவென்னெனுகிறவிமானத்தினாற்பரிணமிக்கிறது விருத்தி-அவற்றின்சங்கோசமே சீரணத்துவம்,

ச-கை, சூட்சுமகாரணசரீரத்திற்கு விருத்திசீரணத்துவமெங்கேகாணப்படுகிறதென்னில்,

உ-ம், அஞ்ஞானிகளிடத்தில் விருத்தியும் முமுட்சுக்களிடத்திற் சங்கோசமுங் காணப்படுகின்றது ஆகையினாலிதுகளுக்குஞ் சரீரமென்றுபேர்வந்தது,

ச-கை, தேகமென்றுபெயரென்னவந்ததென்னில்,

உ-ம், தகிக்கப்படுகின்றபடியினால் தேகமென்றுபேர்வந்தது,

ச-கை, தகிக்கப்படுகின்றதாவென்னில்,

உ-ம், தகிக்கப்படுகின்றது,

ச-கை, எப்படியென்னில்,

உ-ம், அக்கினியிற்பஸ்மாகாரமாகத்தகிக்கப்படுகின்றது,

ச-கை, இந்தசரீரமல்லவோ தகிக்கப்படுகின்றது ஆனாலுஞ்சூட்சுமகாரணசரீரங்கள் தகிக்கப்படுகிறதாவென்னில்,

உ-ம், அதுகளுந்தகிக்கப்படுகிறது,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், சர்வதா-தாபத்திரயங்களினாற்றகிக்கப்படுகிறது சூட்சுமகாரணசரீரம் ஞானாக்கினியினால் தகிக்கப்படுகின்றது ஆகையினாலிம்மூன்றுசரீரத்திற்குந்தேகமென்றுபெயர்வந்தது,

ச-கை, மூன்றுசரீரத்திற்குஸ்தூலசரீரமென்றுபேர்வந்ததென்னில்

உ-ம், மயிர் தோல் நரம்பு தசை எலும்பு கொழுப்பு இந்த ஆறும் ஸ்தம்பம் போற் பிரத்தியட்சத்தில் ஸ்தூலமாய்த் தோற்றுகிறபடியினால் ஸ்தூலசரீரமென்றுபெயர்வந்தது,

ச-கை, மத்தியசரீரத்திற்குச் சூட்சுமசரீரமென்றுபேர் ஏன்வந்ததென்னில்,

உ-ம், பூர்வசரீரம்போல் ஸ்தூலமாய்த்தோற்றாதபடியினால் சூட்சுமசரீரமென்றுபேர்வந்தது,

ச-கை, இதற்குலிங்கசரீரமென்றுபேர்ஏன்வந்ததென்னில்,

உ-ம், ஞானமானசத்தாதிவிஷயங்களை யறியப்பண்ணுகிறபடியினாலும் ஆத்மாவைலட்சணத்தினை யறியப்பண்ணுகிறபடியினாலும்லிங்கசரீரமென்றுபேர்வந்தது,

ச-கை, பச்சிமசரீரத்திற்குக் காரணசரீரமென்றுபேர் ஏன்வந்ததென்னில்,

உ-ம், இவ்விரண்டுசரீரங்களையும் பிறப்பிக்கிறபடியினாலதற்குக்காரணசரீரமென்றுபேர்வந்தது,

ச-கை, ஸ்தூலசரீரம் பிரத்தியட்சமாய்த்தெரிகிறபடியினால்உண்டென்றுசொல்லலாம் அதுபோல்சூட்சுமசரீரம் பிரத்தியட்சமாய்த்தெரியாதபடியினால் ஸ்தூலத்திற்கன்னியமான சூட்சுமசரீரத்தைப்படியுண்டென்றுசொல்லுகிறதென்னில்,

உ-ம், பதினேழுவிதமானகாரியத்தைக்குறித்துச் சூட்சுமசரீரமுமுண்டென்றுசொல்லலாம்,

ச-கை, இந்தப்பதினேழுவிதமான காரியங்களுந்ஸ்தூலசரீரத்தினாலேயே செய்யப்படுகிறதென்றுசொல்லுவோமேயென்னில்,

உ-ம், சுழுத்திமூர்ச்சைமரணம்வந்தபோது இந்தஸ்தூலசரீரத்தினாற் பதினேழுவிதகாரியமும்பண்ணவேண்டும்பண்ணாதபடியினால் ஸ்தூலசரீரகாரியமென்றுசொல்லக்கூடாது

ச-கை, மற்றெதினுடையகாரியமென்னில்,

உ-ம், ஸ்தூலத்திற்கன்னியமான சூட்சுமசரீரகாரியமென்றேசொல்லவேண்டும்,

ச-கை, ஸ்தூலத்தைவிட்டுச்சூட்சுமசரீரஞ் சுதந்தரமாயொருகாரியமுஞ் செய்யாதபடியினாற்சூட்சுமசரீரகாரியமென்றெப்படியறிகிறதென்னில்.

உ-ம், அறியலாம்எப்படியென்றால் திருஷ்டாந்தத்தில் அக்கினியானது கட்டையையாவது சரித்துச்சுட்டுத்தன் ஸ்வரூபமாக்கிக்கொண்டு

தாகயாகாதிக் கிரியைகளைப் பண்ணினாலும் அந்தத்தாகயாகாதிக் கிரி
யைகள் கட்டையின் காரியமல்லாதது போல சூட்சுமசரீரமுந் தூல
த்தையாசிரயித்துப பதினேழு விதமான காரியங்களைப் பண்ணி
னபோதும் கேவலமான தூலத்திற் கன்னியமான சூட்சும சரீரத்தி
ன்காரியமென்றேயறியவேண்டும்.

ச-கை. ஆனால்பதினேழுவிதமானகாரியமேதென்னில்

உ-ம். காரணமுன்னிலையாயறியவேண்டும்,

ச-கை- காரணமாவதேதென்னில்,

உ-ம்- பதினேழுவிதஅவயங்களான சூட்சுமசரீரமேகாரணம்,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- ஞானேந்திரியபஞ்சகமுங்கன்மேந்திரிய பஞ்சகமும்பிராணாதிபஞ்
சகமுஞ் சித்தத்தோடுங் கூடினமனதும் அகங்காரத்துடன் கூடின பு
த்தியுமாகிய இந்தப்பதினேழுங்கூடிச் சூட்சுமசரீரமெனப்படும்,

ச-கை- ஞானேந்திரியபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம்- சுரோத்திரம் தொக்கு சட்சுசிங்குவை ஆக்கிராணம் ஆக ௫

ச-கை- சுரோத்திராதிகளுக்கு ஞானேந்திரியமென்றுபேரென் வந்ததெ
ன்னில்,

உ-ம். சத்தாதி விஷயங்களைக்கிரகிக்கிறபடியினால் ஞானேந்திரியமென
ப்பேர்வந்தது,

ச-கை- இதற்கு ஞானோற்பத்தியெப்படிவந்ததென்னில்,

உ-ம். சாத்துவிககுணத்திலுற்பத்தியாகையினால் ஞானம்வந்தது,

ச-கை- கன்மேந்திரியபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். வாக்கு பாதம் பாணிபாயுரு உபஸ்தம் ஆக (௫)

ச-கை. இதற்குக்கன்மேந்திரியமென்றுபேரென்வந்த தென்னில்,

உ-ம் வசனாதிக்கிரியைகளைப்பிறக்கிறபடியினால்கன்மேந்திரியமெனப்
பட்டது,

ச-கை. இதற்குக்கிரியோற்பத்தியெப்படிவந்ததென்னில்.

உ-ம் ராசதகுணத்திலுற்பத்தியாகையினாற்கிரியோற்பத்திவந்தது

ச-கை- பிராணாதிபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் ஆக ௫

ச-கை- இதற்குப்பிராணாதியென்றுபேரென்வந்ததென்னில்,

உ-ம்- தூலசரீரத்தைச்சீவிக்கப் பண்ணுகிறபடியால் பிராணனெனப் பேர்வந்தது,

ச-கை- மனம்புத்தியாவதேதென்னில்

உ-ம்- அந்தக்கரண விருத்திவிசேஷங்களேமனம் புத்தியென்னப் படும்,

ச-கை- ஆறுஞ்சுரோத்திரேந்திரியமெவ்வகைப்பட்டதென்னில்.

உ-ம்- சத்தங்களெல்லா மெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அதுவேசுரோ த்திரேந்திரியம்

ச-கை- அந்தச்சத்தமெத்தனைவகைப்படுமென்னில்,

உ-ம்-லௌகீகம்வைதிகமென்றிரண்டுவகைப்படும்,

ச-கை- லௌகீகமாவதேதென்னில்,

உ-ம்- பிராகிருதரூபமானபதினெண்பாஷைகளும் லௌகீகம்,

ச-கை- வைதிகமாவதேதென்னில்.

உ-ம்- அப்பிராகிருதரூபமானவேதசாத்திரங்களைத்தும்மை வைதிகம்,

ச-கை- இந்த லௌகீகமெத்தனைவிதமென்னில்,

உ-ம்-அனந்தவிதமாயிருக்கும்,

ச-கை. வைதிகமெத்தனைவிதமென்னில்,

உ-ம், அதுவுமனந்தவிதமாயிருக்கும் அன்றியில்பஞ்சீகிருதபேதத்தில்சு த்தமிருபத்தைந்துவிதம் இத்தனைவித சத்தங்களு மெதினால் கிரகிக்க ப்படுகிறதோ அஃதே சுரோத்திரேந்திரியம்,

ச-கை, இந்தச்சுரோத்திரேந்திரிய மெங்கேயிருக்கிறதென்னில்

உ-ம், கர்ணஷட்குலியவிச்சின்ன நபோதேசத்தையாசிரயித்திருக்கின் றது,

ச-கை- அந்தநபோதேசமேசுரோத்திரேந்திரியமென்றுசொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்திமூர்ச்சைமரணமடைந்தசரீரங்களிலுமிருக்கிற நபோதே சத்திலுஞ் சத்தத்தைக்கிரகிக்கவேண்டும் அங்ஙனமில்லாதபடியி னால் அந்தநபோதேசத்திற்கன்னியமாய் சத்தக்கிராகியசத்திமத்தாய் சூட்சுமமான ஒருவஸ்து நபோதேசத்தையாசிரயித்துக் கொண்டிரு க்கிறது அதற்கே சுரோத்திரேந்திரியமென்றுபெயர் அதற்கதிட்டான தேவதை திக்கு அவ்வதிட்டானதேவதையினால் பிரேரிக்கப் பட்டசு ரோத்திரேந்திரியஞ்சத்தமெல்லாமறிந்துபஞ்சீகிருதபேதசத்தவி ருப்பனதயுமறிந்துக்கொண்டேயிருக்கும்.

ச-கை- தொக்கிந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- பரிசமெல்லாமெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அதுவே தொக்கிந்திரியம்,

ச-கை, அந்தப்பரிசமெத்தனைவிதமென்னில்,

உ-ம், சீத உஷ்ண சீதோஷ்ண மிருது கடினமென்னுமைந்துவிதம் அவற்றுள் ஒவ்வொன்றனந்தவிதமாயிருக்கும்,

ச-கை, இந்தத்தொக்கிந்திரியமெங்கேயிருக்குமென்னில்,

உ-ம், தொக்கைச்சர்வத்திரவியாபித்துக்கொண்டிருக்கும்,

ச-கை, ஆனால்தொக்கையே தொக்கிந்திரியமென்று சொல்லலாமே யென்னில்.

உ-ம்- சுழுத்திமூர்ச்சைமரண சரீரத்திலிருக்கின்ற தொக்கினாற்பரிசத்தைக்கிரகிக்கவேண்டும் அங்ஙனங்கிரகியாதபடியினால் அந்தத்தொக்குக்கன்னியமான பரிசக்கிராகிய சத்திமத்தாய் சூக்ஷுமமானதொருவஸ்து சிரசுமுதல் பாதாதேசத்திலிருந்திரண்டுகலைசாய்த் தொக்கைப்பரிசித்துக்கொண்டிருக்கிறது அதற்கேதொக்கிந்திரியமென்றுபெயர். அதற்கதிட்டானதேவதை வாயு அவ்வதிட்டானதேவதையினால் பிரேரிக்கப்பட்ட தொக்கிந்திரியம்பரிசத்தையெல்லாமறிந்து பஞ்சீகிருதபேதபரிசமிருப்பதையுமறிந்துகொண்டிருக்கும்,

ச-கை, சட்சுவிந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- ரூபமெல்லாமெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அஃதே சட்சுவிந்திரியம்,

ச-கை- அந்த ரூபமெத்தனைவகைப்படுமென்னில்,

உ-ம்- வெள்ளை சிவப்பு பச்சை மஞ்சள் கறுப்பு ஊதா மிசிரம் அகலங்களம் உயர்ச்சி தாழ்ச்சி இவற்றுள் ஒவ்வொன்றனேகவிதமாயிருக்கும் இத்தனைரூபங்களுமெதினால் தெரியப்படுகிறதோ அதுவேசட்சுவிந்திரியம்,

ச-கை. அதுஎங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- கருவிழியையாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-கை ஆனால்கருவிழியேசட்சுவிந்திரியமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். சுழுத்திமூர்ச்சைமரணசரீரங்களிலிருக்கிற கருவிழியினால் ரூபத்தையறியவேண்டும் அங்ஙனமறியாதபடியினால் கருவிழிக்கன்னியமான ரூபத்தைக்கிரகிக்கிறசத்திமத்தாய் சூக்ஷுமமாயொருவஸ்துசிரசுக

வேறேபோதேசத்திலிருந்து இரண்டுகெவராய்க்குவளை முன்னிலேயிலங்கக்கரு விழியையாசிரசித்துக் கொண்டிருக்கிறது. அதற்கே சட்சுவிந்திரியமென்றுபெயர். அதற்கதிட்டானதேவதைசூரியன் அவ்வதிட்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்டசட்சுவிந்திரியம் ரூபமெல்லாமறிந்துபஞ்சீகிருதபேதரூபமிருப்பதையுங்கிரகித்தறிந்துக் கொண்டிருக்கும்,

ச-கை, சிங்ஙுவையிந்திரியமாவதேதென்னில்,

உ-ம், ரசமெல்லா மெதினுற்கிரகிக்கப்படுகிறதோ அதற்கேசிங்குவையென்றுபெயர்.

ச-கை அந்தரசமெத்தனைவிதமாயிருக்குமென்னில்,

உ-ம். உப்பு புளிப்பு கார்ப்பு கசப்பு துவர்ப்பு தித்திப்பு என்றாறுவிதம் அவற்று ளொவ்வொன்றனேக விதமாயிருக்கும் இத்தனையுமெதினுற் கிரகிக்கப்படுகிறதோ அதுவேசிங்குவேந்திரியம்

ச-கை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம், நுனிநாவையாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-கை- ஆனுல் நுனிநாவையேசிங்குவேந்திரியமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம்- சுழுத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிறநுனிநாவிலுல்ரசங்களெல்லாங்கிரகிக்கவேண்டும் அப்படிகிரகிக்காதபடியினுல்அந்தநுனிநாவுக்கன்னியமாய் ரசகிராஹ்யசத்திமத்தாய்சூட்சுமமாய் ஒருவஸ்துகபாலகுகிவில்நபோதேசத்திலிருந்துஇரண்டுகெவராய்நந்ததாலேகூடத்தைப்பற்றி அந்தநுனிநாவையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கேசிங்குவேந்திரிய மென்றுபெயர், அதற் கதிட்டானதேவதை வருணன் அவ்வதிஷ்டானதேவதையினும் பிரேரிக்கப்பட்டசிங்குவேந்திரியம்ரசங்களையெல்லாமறிந்துபஞ்சீகிருதபேதரசங்களையுங் கிரகித்துக்கொண்டிருக்கும்,

ச-கை- ஆக்கிராணேந்திரியமாவதேதென்னில்,

உ-ம். சுகந்ததுர்க்கந்த மெல்லாமெதினும்கிரகிக்கப் படுகிறதோ அதற்கே ஆக்கிராணேந்திரியமென்றுபெயர்,

ச-கை அதுஎத்தனைவிதமாயிருக்குமென்னில்,

உ-ம், சுகந்த துர்க்கந்த மிசிரகந்தமென மூன்றுவிதம் அவற்றுளொவ்வொன்றனேகவிதமாயிருக்கும் இத்தனையுமெதினுற்கிரகிக்கப் படுகிறதோ அதுவேஆக்கிராணேந்திரியம்,

ச-கை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம், நுனிமூக்கையாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-ங்கை, ஆனால் நுனிமூக்கையேகிராணேந்திரியமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம்- சூக்ஷ்மமூர்ச்சைமானசரீரங்களிலிருக்கிற நுனிமூக்கினுங்கந்தமறியவேண்டும் அங்ஙனமறியாதபடியினால் நுனிமூக்குக்கன்னியமாய்கந்தகிராஹ்யசக்திமத்தாய்சூக்ஷமமாய் ஒருவஸ்துகபாலத்திலிருக்குமதுமுகாரவிந்தவழியாய்நாசிகையாய்மூக்கூடுக்கண்டடையும்படியாய் அந்த நுனிமூக்கையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கே ஆக்கிராணேந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதேவதை அசுவினி அவ்வதிஷ்டானதேவதையாற்பிரேரிக்கப்பட்ட ஆக்கிராணேந்திரியங்கந்தங்களையெல்லாங்கிரகித்து பஞ்சீகிருதபேதகந்தங்களையுமறிந்துக்கொண்டிருக்கும்,

ச-ங்கை, கர்மேந்திரியங்களில் வாக்கிந்திரியமாவதேதென்னில்,

உ-ம். சத்தமெல்லாமெதினாலுச்சரிக்கப்படுகிறதோ அதுவே வாக்கிந்திரியம்,

ச-ங்கை- அது எங்கேயிருக்கிறதென்னில்,

உ-ம், நுனிநாக்குமூலம்மேலுதடு கீழுதடு பல் கண்டம்இருதயம்பிரமரந்திரமென்கிறஅஷ்டஸ்தானங்களையுமாசிரயித்துக்கொண்டிருக்கும்

ச-ங்கை- ஆனாலந்த அஷ்டஸ்தானங்களையேவாக்கிந்திரியமென்றுசொல்லலாமேயென்னில்.

உ-ம். சூக்ஷ்மமூர்ச்சைமானசரீரங்களிலிருக்கிற அஷ்டஸ்தானங்களினுஞ்சத்தங்களுச்சரிக்கப்படவேண்டும் அங்ஙனமில்லாதபடியினால் அவ்வஷ்டஸ்தானங்களுக்குமன்னியமாய்சத்த முச்சரிக்கிற சக்திமத்தாய்சூக்ஷமமாய்ஒருவஸ்துமுகாரவிந்தத்திலிருந்து அஷ்டஸ்தானங்களையுமாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கேவாக்கிந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதேவதை அக்கினி அவ்வதிஷ்டானதேவதையாற்பிரேரிக்கப்பட்டவாக்கிந்திரியஞ்சத்தமெல்லாமுச்சரித்துக்கொண்டிருக்கும்,

ச-ங்கை பாணீந்திரியமாவதேதென்னில்

உ-ம். கொடுக்கல்வாங்கல் முதலானகிரியைகளெதினால் செய்யப்படுகிறதோ அதற்குப்பாணீந்திரியமென்றுபெயர்.

ச-ங்கை. அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்-உள்ளங்கையிலாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-கை-ஆனால்உள்ளங்கையேபாணிந்திரியமென்னலாமேயெனில்.

உ-ம்-சுழுத்திமூர்ச்சைமரணசரீரங்களிலிருக்கிற வுள்ளங்கையினாலுந்தானதிக்கிரியைகளைப்பண்ண வேண்டும் பனாது இருக்கிறபடியால்உள்ளங்கைக்கன்னியமாய்தானதிக்கிரியாசத்திமத்தாய சூட்சுமமாய் ஒருவஸ்துமுகாரவிந்தத்திலிருந்து உள்ளங்கையையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கேபாணிந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதேவதை இந்திரன்அவ்வதிஷ்டானதேவதையினால் பிரேரிக்கப்பட்டபாணிந்திரியங் கொடுக்கல் வாங்கலாகிறகிரியைகளைச்செய்யும்.

ச-கை. பாதேந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- கமனக்கிரியைகளையெதினாற்செய்யப்படுகிறதோ அதற்குப்பாதேந்திரியமென்றுபெயர்.

ச-கை. எங்கேயிருக்குமென்னில்,

உ-ம், உள்ளங்காலையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேபாதேந்திரியம்,

ச-கை, ஆனாலுள்ளங்காலேயே பாதேந்திரியமென்று சொல்லலாமேயெயென்னில்,

உ-கை, சுழுத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிற வுள்ளங்காலினாலேகமனக்கிரியைகளைப்பண்ணவேண்டும் பனாதபடியினால் உள்ளங்காலுக்கன்னியமாய்கமனக்கிரியாசத்திமத்தாய்சூட்சுமமாய்ஒருவஸ்துமுகாரவிந்தத்திலிருந்திரண்டு கரையஉள்ளங்காலையாசிரயித்துக்கொண்டிருக்கும்அதற்கேபாதேந்திரியமென்றுபெயர்அதற்கதிஷ்டானதேவதைஉபேந்திரன் அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்டபாதேந்திரியங்கமனக்கிரியைகளைப்பண்ணும்,

ச-கை, பாயுரிந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- மலவிசர்க்கனக்கிரியைகளையெதினாற் செய்யப்படுகின்றதோ அதற்குப்பாயுரிந்திரியமென்று பெயர்,

ச-கை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- குதத்தையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேபாயுரிந்திரியம்,

ச-கை-ஆனால்குதத்தையேபாயுரிந்திரிய மென்னலாமேயெனில்,

உ-ம்- சுழுத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிறகுதத்தினாலும்விசர்க்கனக்கிரியைகளைச்செய்யவேணும் அப்படிக்கில்லாதபடியினால்

குதத்திற்கன்னியமாய்மலவிசர்க்கனக்கிரியாசத்திமத்தாய்சூட்சமமா
ய் ஒருவஸ்துரூபமாயிருக்கிறது அதுகுதத்தையாசிரயித்துக்கொண்
டிருக்கும் அதற்கேபாயுவிந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதே
வதைமிருத்யு அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்ட
குதேந்திரியமலவிசர்க்கனக்கிரியையைப்பண்ணும்,

சங்கை உபஸ்தேந்திரியமாவதேதென்னில்,

உ-ம்-சுக்கிலமூத்திர விசர்க்கனக்கிரியைகளெதினாற் செய்யப்படுகிற
தோ அதற்கு உபஸ்தேந்திரியமென்றுபெயர்,

சங்கை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- யோனிலிங்கங்களையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேயுபஸ்
தேந்திரியம்,

சங்கை- யோனிலிங்கங்களையே யுபஸ்தேந்திரியமென்று சொல்லலாமே
யென்னில்,

உ-ம். சுழுத்திமூர்ச்சைமரணசரீரங்களிலிருக்கிற யோனிலிங்களினாலும்
சுக்கிலமூத்திரவிசர்க்கனக்கிரியைகள் பண்ணவேண்டும் பண்ணாத
படியினால் யோனிலிங்கங்களுக்கன்னியமாய்சுக்கிலமூத்திரவிசர்க்கன
க்கிரியாசத்திமத்தாய் சூட்சமமாய் ஒருவஸ்துரூபமாயிருக்கிற
துயோனி லிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கு உபஸ்
தேந்திரிய மென்று பெயர் அதற்கதிஷ்டானதேவதைபிரஜாபதி அவ்
வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்ட உபஸ்தேந்திரியஞ்சுக்கில
மூத்திரவிசர்க்கனக்கிரியைகளைப்பண்ணும்,

சங்கை-பிராணாதிபஞ்சகத்திற்பிராணவாயுவாவதேதென்னில்,

உ-ம் - உச்சுவாசமெதினாற்பண்ணப்படுகின்றதோ அதற்குப்பிராணவாய்
வென்றுபெயர் அதற்குஸ்தானம்இருதயம்அதற்கதிஷ்டானதேவதை
விஷ்ட்டன் அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்டபிராண
வாயுவுச்சுவாசம்பண்ணிக்கொண்டிருக்கும்,

சங்கை- அபானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- நிசுவாசமெதினாற்பண்ணப்படுகிறதோ அதற்கபானவாயுவென்று
பெயர் அதற்குஸ்தானங்குதம் அதற்கதிஷ்டானதேவதை நிருதத்
தா அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்ட அபானவாயுநி
சுவாசம்பண்ணிக்கொண்டிருக்கும்,

சங்கை, வியானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- சரீரத்தையுப்பலப்பட நிறுத்தியிந்திரியங்களுக்குப் பலனைக்கொடு

த்துக்கொண்டிருக்கிறதெதுவோ அதற்குவியானவாயுவென்றுபெயர், அதற்குஸ்தானம் சர்வசரீரம்அதற்கதிஷ்டானதேவதைவிசுவயோனி அவவதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்டவியானவாய்வுஇந்திரியங்களுக்குப்பலனைக்கொடுத்துச்சரீரமெல்லாம்வியாபித்திருக்கும்

ச-கை, உதானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- சுழுத்திகாலம்வந்தபோது சகலவிந்திரியங்களையுமெடுத்துக்கொண்டு தனக்குக்காரணமான அஞ்ஞானத்திலெது லயிக்கப்பண்ணுகிறதோ, சாக்கிராவஸ்தையிலந்த இந்திரியங்களையந்தந்தவிடத்திலெதுநிறுத்துகிறதோ, மரணகாலம்வந்தபோதுசகலவிந்திரியங்களையுங்கிரகித்துக்கொண்டு லோகாந்தரத்திற் கெதுபோகிறதோ, அஃதேயுதானவாய்வு, அதற்குஸ்தானங்கண்டம் அதற்கதிஷ்டானதேவதைபிரமதேவன் அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்ட உதானவாய்வு இத்தியாதிதொழில்களைநடத்தும்,

ச-கை, சமானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- உண்டல் குடிதல் உறிஞ்சல் நக்கலென்கிறநாலுவிதவுண்டிகளைச்சாடராக்கினியோடு கூடியுபசமனம் பண்ணிச்சரீரத்திறகெதுபுஷ்டிசெய்விக்கிறதோ அதற்குச்சமானவாயுவென்றுபெயர். அதற்குஸ்தானம்நாபி அதற்கதிஷ்டானதேவதைசூரியன் அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்டசமானவாயுவுமேற்சொல்லிய கிரியைகளைச்செய்யுமிதுவன்றி உபவாயுக்களைந்துமிதற்குள்அந்தர்ப்பூதமாயிருக்கின்றது. தொழில்மாத்திரம்வேறு அதிதேவதையும் ஸ்தானமுமொன்றாகவிருக்கும்,

ச-கை, அந்தவாயுவுகளாவதேதென்னில்,

உ-ம், நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்றுபஞ்சவாயுக்கள் அவற்றுள் வாந்திசெய்விப்பது நாகன் விக்கல்ஏப்பம்இமைப்புவிழிப்புகளைச்செய்விப்பது கூர்மன் தும்மலிருமலைச்செய்விப்பது கிரிகரன் சிரித்தல் வசனித்தலைச்செய்விப்பதுதேவதத்தன் துர்க்கந்தமாக்கிச்சரீரம் வீங்கப் பண்ணித்தலைவெடிக்கச் செய்வதுதனஞ்செயன் என்றுசொல்லப்படும்,

ச-கை- அந்தக்கரணசதுஷ்டயத்தில்மனமாவதேதென்னில்,

உ-ம்-சங்கற்பவிகற்பமெதினாற்பண்ணப்படுகிறதோ அதுவேமனம்

ச-கை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- கண்டத்தின்கீழிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை சந்திரன் அவ்வதிஷ்டானதேவதையினும்பிரேரிக்கப்பட்டமனதுசங்கற்பவிகற்பம்பண்ணிக்கொண்டிருக்கும்,

ச-கை- புத்தியாவதேதென்னில்,

உ-ம்- நிச்சயமெல்லாமெதினாற்பண்ணப்படுகிறதோ அதுவேபுத்தி

ச-கை- அதுஎங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- முகத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை சதுர்முகன் அவ்வதிஷ்டானதேவதையினும் பிரேரிக்கப்பட்ட புத்தி நிச்சயமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்,

ச-கை- அகங்காரமாவதேதென்னில்,

உ-ம்- அபிமானமெல்லாமெதினாற்செய்யப்படுகிறதோ அதுவேயகங்காரம்,

ச-கை, அதுஎங்கேயிருக்குமென்னில்.

உ-ம், இருதயத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை ருத்திரன் அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்ட அகங்காரம் அபிமானமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்,

ச-கை- சித்தமாவதேதென்னில்,

உ-ம்- சிந்தனையெல்லாமெதினாற் செய்யப்படுகிறதோ அதுவேசித்தம்,

ச-கை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- நாபிப்பிரதேசத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை விஷ்ணு அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்டசித்தஞ்சிந்தனையெல்லாம்பண்ணிக்கொண்டிருக்கும் அதுவுமன்றி இந்தலிங்கசரீரமேஷோடசாத்மகமென்றதொருசுருதியிற் சொல்லுகிறது; அந்தப்பாடத்திலந்தக்கரணமதுவொன்றுமாத்திரமேயாகும் பதினேழென்றதொருசுருதியிற்சொல்லுகின்றது அந்தப்பாடத்தில்மனமுஞ்சித்தமும் ஒன்றென்றும் புத்தியுமகங்காரமுமொன்றென்றாகும், பத்தொன்பதென்றதொருசுருதியிற்சொல்லுகிறது அந்தப்பாடத்திலந்தக் கரணங்கள் நாலையுஞ்சொல்லுவதாகும், அப்படி எத்தனை விதமாகச் சொன்னாலும் விரோதமில்லை இப்படிப் பதினேழு விதகாரியங்களினும் பதினேழவயமானலிங்கசரீரமுண்டென்றுநிச்சயிக்கப்பட்டது,

ச-கை- காரணசரீரமுண்டென்றெப்படியறிகிறதென்னில்.

உ-ம்- காரியமானஸ்தூலசூக்ஷ்மமாகிய இரண்டுசரீரங்கள் காரணப்

பங்கிறபடியினாலிதுகளுக்குக் காரணமொன்றுண் டென்றுயுத்தியினாலேவேண்டியது,

ச-ங்கை. காரியத்தினால்காரணத்தையூகித்தறியலாமாவென்னில்,

உ-ம். காரியமானபுகையினாற்காரணமான அக்கினியுண்டென்றூகித்தறிவதுபோலக்காரியமானஸ்தூலசூட்சும சரீரங்களினாற்காரணமான சரீரமுண்டென்றூகித்தறியலாமல்லாமலும் ஆகமஞானியென்றுமிரத்தியட்சமாயனுபவிக்கிறபடியினாற் காரணசரீரமுண்டென்று நிச்சயிக்கலாமிப்படிநிச்சயம்பண்ணினபிறகு ஆத்மாவுக்குச் சரீரத்திரய விலட்சணத்துவமெப்படியென்றுவிசாரிக்கவேணும்,

ச-ங்கை, ஆத்மாவுக்குச்சரீரத்திரயவிலட்சணமாவதேதென்னில்,

உ-ம். ஆத்மலட்சணஞ்சரீரத்திரயத்திலும்சரீரத்திரயலட்சணமாத்மாவிலுமில்லாதிருக்கிறதேசரீரத்திரயவிலட்சணம்,

ச-ங்கை. ஆனாலாத்மலட்சணமேதென்னில்,

உ-ம். சத்துசித்து ஆனந்தமேயாத்மலட்சணம்,

ச-ங்கை. அனாத்மலட்சணமேதென்னில்,

உ-ம். அசத்துசடம்துக்கமேயனாத்மலட்சணம்,

ச-ங்கை. இந்தலட்சணங்களுக்கன்னியோன்னியவிலட்சணமுண்டோவென்னில்,

உ-ம். உண்டு, திருஷ்டாந்தத்திலஸ்திரீலட்சணம்புருஷனிடத்திலும்புருஷலட்சணம்ஸ்திரீயினிடத்திலுமில்லாதுபோற்சத்துலட்சணமசத்திலும் அசத்துலட்சணஞ்சத்திலுமில்லை பிரகாசலட்சணமந்தகாரத்திலும் அந்தகாரலட்சணம்பிரகாசத்திலுமில்லாதுபோலசித்துலட்சணஞ்சடத்திலுஞ் சடலட்சணஞ்சித்திலுமில்லைசந்திரலட்சணஞ்சூரியனிலுஞ்சூரியலட்சணஞ்சந்திரனிலுமில்லாது போலஆனந்தலட்சணந்துக்கத்திலுந்துக்கலட்சணமானந்தத்திலுமில்லை, இப்படிசச்சிதானந்தத்துக்கும் அசத்துசடந்துக்கத்துக்குமன்னியோன்னிய விலட்சணத்துவமாகச்சத்துலட்சணமுமசத்துலட்சணமும் சித்துலட்சணமுஞ்சடலட்சணமும்ஆனந்தலட்சணமுந்துக்கலட்சணமுமுண்டு இதுகளைவிசாரித்தறியாமலாத்மாவின் அன்னியோன்னிய விலட்சணத்துவமறியக்கூடாது,

ச-ங்கை. சத்துலட்சணமாவதேதென்னில்,

உ-ம். ஒன்றினாலும் வாதிக்கப்படாமல் பூதபவிஷியவர்த்தமானகாலத்திலும் ஏகரூபமாயிருக்கிறதெதுவோ அதுவேசத்துலட்சணம்.

ச-கை, அசத்துலட்சணமாவதேதென்னில்,

உ-ம்- காலத்திரயத்திலுமில்லாததாயிருந்துந்தோற்றிக்கொண்டு ஞானத்தி
னால் வாதிக்கப்பட்டுப்போகிறதெதுவோ அதுவேயசத்துலட்சணம்,

ச-கை- இதற்குத்திருஷ்டாந்தமுண்டோவென்னில்,

உ-ம்- உண்டு,

ச-கை- அது எப்படியென்னில்.

உ-ம்- பழுதையும்பழுதையினிடத்தாரோபிக்கப்பட்டபாம்புமேதிருஷ்
டாந்தம்,

ச-கை- பழுதையினிடத்தில் சத்துலட்சணமும் அசத்துலட்சணமுமு
ண்டோவென்னில்,

உ-ம்- உண்டு,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- பழுதையினிடத்திலாரோபிக்கப்பட்ட சர்ப்பமுதலானபய பிறக
ளாகிறதென்றாலும் அந்தப்பழுதை வாதிக்கப்படாமல்பிராந்தி காலத்
திலும் பிராந்திக்குப்பூர்வகாலத்திலும்பிராந்திபோனபிற் காலத்திலு
மொரேரூபமாயிருக்கதே சத்துலட்சணம்ஞானில்லாதிருந்துந் தோற்றி
க்கொண்டுஞானத்தினால்வாதிக்கப்பட்டுப்போகிறதே அசத்துலட்சணம்
இதுசர்ப்பத்தினிடத்திலுமுண்டுபழுதைலட்சணம்பாம்பினிடத்தில்
லாதபடியினாலும் பாம்புலட்சணம்பழுதையினிடத்தில்லாதபடியினா
லும்அந்தப்பாம்புபழுதைகளுக்குச்சத்தத்தினாலும் அர்த்தத்தினாலு
ம்லட்சணத்தினாலும் உபமானத்தினாலும்விகாரத்தினாலும் பேதல
ட்சணமுண்டாயிருப்பதுபோலச்சத்துலட்சணம்தே கேந்திரியாதிப்
பிரபஞ்சத்தினிடத்திலில்லாதபடியினாலும் அசத்துலட்சணஞ் சத்தா
ன ஆத்மாவினிடத்திலில்லாதபடியினாலுமசத்துக்குஞ்சத்துக்கும்
சத்தத்தினாலும்அர்த்தத்தினாலும்லட்சணத்தினாலும்உபமானத்தினா
லும்விகாரத்தினாலும்பேதமுண்டு,

ச-கை- இதினெலன்னவிதத்திசுதென்னில்,

உ-ம்- சத்தென்றசத்தம்அசத்தென்றசத்தமாகாது அசத்தென்றசத்தஞ்ச
த்தென்றசத்தமாகாது, சத்தினுடையசத்தார்த்தம்அசத்தினுடையச
த்தார்த்தமாகாது, அசத்தினுடையசத்தார்த்தஞ்சத்தினுடையசத்தா
ர்த்தமாகாது, சத்தினுடையலட்சணம்அசத்தினுடையலட்சணமல்ல
அசத்தினுடையலட்சணஞ்சத்தினுடையலட்சணமல்ல-சத்தினுடை
யவுபமானம்அசத்தினுடையவுபமானமல்ல-அசத்தினுடைய வுபமா

ணம் சத்தினுடையவுபமானமல்ல சத்தினுடைய விகாரம் அசத்தி னுடையவிகாரமல்ல- அசத்தினுடையவிகாரஞ்சத்தினுடைய வி காரமல்ல-ஆகையினால்சத்துருபமான ஆத்மாவுக்கும் அசத்துருப மானதேகேந்திரிய இப்பிரபஞ்சத்திற்கும் பழுதையும் பாம்பும்போ லைந்துவகையினாலுங் காலத்திரயத்திலும் அன்னியோன்னியபேதல ட்சணஞ்சித்திச்சுது,

ச-கை, சித்துலட்சணமேதென்னில்,

உ-ம்-ஒருசாதனமுமபேட்சியாமல்தானுந்தோற்றிக்கொண்டு தன்னிடத் திலாரோபிக்கப்பட்டபதார்த்தங்களையுந்தோற்றிவைக்கிறதெதுவோ அதுவே சித்துலட்சணம்,

ச-கை. சடலட்சணமேதென்னில்,

உ-ம்- தானுந்தோற்றாமல் அன்னியவஸ்துவையுந்தோற்றிவையாமலிரு க்கிறதெதுவோ அதுவே சடலட்சணம்,

ச-கை- இதற்குத்திருஷ்டாந்தமுண்டோவென்னில்,

உ-ம்- உண்டு.

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம்- சூரியப்பிரகாசத்தினால் விளங்குகிறகடங்களும் சூரியப்பிரகாசமு ந்திருஷ்டாந்தம்,

ச-கை, ஆதித்தனிடத்திற்சித்துலட்சணமுண்டோவென்னில்,

உ-ம். திருஷ்டாந்த மெல்லாமேகதேசமாகையினால் ஏகதேசதிருஷ்டாந் தமானஆதித்தனிடத்திற்சித்துலட்சணமுண்டு,

ச-கை- அதெப்படியென்னில்

உ-ம்.ஆதித்தன்பிரகாசாந்தரங்களையபேட்சியாமல்தானுந்தோற்றிக்கொ ண்டு தற்பிரகாசத்தைச்சம்பந்திக்கிறகடங்களையுந்தோற்றிவை க்கிறபடியாலாதித்தனிடத்திற்சித்துலட்சணமுண்டு

ச-கை, கடத்தினிடத்திற்சடலட்சணமுண்டோவென்னில்,

உ-ம், உண்டு,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம்- தானுந்தோற்றாமல் அன்னியவஸ்துவையுந் தோற்றிவைக்க மாட்டாதபடியினால் சடலட்சணமுண்டு ஆகையால் ஆதித்தலட் சணங்கடத்திலில்லாதபடியினாலுங் கடலட்சணம் ஆதித்தனிடத்தில் லாதபடியினாலும் ஆதித்தனுக்குங் கடத்துக்குஞ் சத்தம் அர்த்த ம்லட்சணம் உபமானம்விகாரமென்கிற ஐவகையினாலும் பேத

உ-ம். வெய்யிலிலேபட்டுத்தபிக்கப்பட்டபுருஷன் அங்கக்குளிர்ந்த நீர்ப்பானையைத் தொட்டுக்கண்ணிலொற்றிக் கொண்டமாத்திரத்தில் அவனுடையதாபம்நிவர்த்தியாகின்றது அதுசாட்சாத்ஜலமல்ல அந்தஜலத்தின் ஆவேசமாத்திரத்துக்கேதாபநிவர்த்தியிருப்பது பிரத்தியட்சமாகக்கண்டோம் அந்தஜலத்தையேபானம்பண்ணினால்தாபங்களும்போமென்பதிற்சந்தேகமில்லையாகையினால் அந்தஜலத்தினிடத்திலானந்தலட்சணமுண்டு,

ச-கை- புளியநெருப்பில்துக்கலட்சணமுண்டோவென்னில்,

உ-ம் உண்டு,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம். தாகதாபாதிகளில்லாதவன் புளியநெருப்போடு கூடியிருக்கிறவெக்கைப்பானையைத்தொட்டமாத்திரத்தில் அந்தப்பானையின் உஷ்ணம் சுடாவந்தால் அதைத்தொட்டவனுக்குத்தாபாதிகளைக்கொடுத்துக் கையெல்லாங்கொப்புளிக்கச்செய்கின்றது அதுசாட்சாத்நெருப்பல்ல நெருப்பினுடைய ஆவேசமாத்திரமே தாபாதிகளைக்கொடுக்கின்றதென்று பிரத்தியட்சமாகக்கண்டோம் அந்தநெருப்பையே தொட்டாற் சமஸ்தாங்கமும் பஸ்மமாகுமென்பதற்குச் சந்தேகமில்லையாகையினால் அந்தப்புளியநெருப்பினிடத்தில்துக்கலட்சணமுண்டு இதுவுமன்றியில்வேறுதிருஷ்டாந்தமுமிருக்கின்றது,

ச-கை, அதெப்படியென்னில்.

உ-ம். அமிர்தமுங்காளகூடவிஷமுமேதிருஷ்டாந்தம்,

ச-கை, அமிர்தத்திலானந்தலட்சணமுண்டோவென்னில்,

உ-ம்- தான்சுகசொரூபமாயிருந்துகொண்டுதன்னைப்பானம்பண்ணினவர்களுக்குநித்தியமானசுகத்தைக்கொடுக்கிறபடியினாலேயமிர்தத்தினிடத்திலானந்தலட்சணமுண்டு,

ச-கை. காளகூடவிஷத்தில்துக்கலட்சணமுண்டோவென்னில்,

உ-ம்- தான்தாபாத்மகமாயிருந்துகொண்டுதன்சமீபத்திலிருந்தவர்களையிருந்ததுக்கரூபமானமரணத்தைச்செய்கிறபடியினால்காளகூடவிஷத்தினிடத்தில்துக்கலட்சணமுண்டு அமிர்தலட்சணங்காளகூடவிஷத்திலில்லாதபடியினாலுங்காளகூடவிஷலட்சணம் அமிர்தத்திலில்லாதபடியினாலும் அமிர்தத்திற்குங்காளகூடவிஷத்திற்கும் முன்சொன்ன ஐந்துவித லட்சணத்தினாலும் பேதலட்சணமிருக்கிறதுபோலும் ஜலலட்சணம் நெருப்பினிடத்திலில்லாதபடியினாலும்நெருப்புலட்சணம் ஜலத்தினிடத்திலில்லாதபடியினாலும் ஜலத்துக்கும் நெருப்புக்கும்

சிவேஸ்வரசொரூபநிருபகம்.

ஊத்துடன் கூடப்பட்ட சூட்சுமசரீரமும் அத்தியந்தம்வேண்டும்.
மேலும், சூட்சுமசரீரந் தூலசரீரத்தை விட்டிராதபடியினாலும்,
அந்தத் தூலசரீர கோளகம் இனறுவாய் அவ்விந்திரியங்களுக்கு விஷ
யங்களைக் கிரகிக்கும்வகைகள் கூடாதபடியினாலும், பிரமாணத்வாதி
யபிமானமில்லாமற் கர்த்ருத்வங்கூடாது. ஆனதினாலுந் தூலசரீரமு
ம்வேண்டும். அசங்கனாகிய வாத்மாவுக்கு அஞ்ஞானமில்லாமல் சரீர
த்துவயவத்தியாசங்கூடாது. ஆனதினாலும் காரியங்காரணத்தைவிட்
டிராதபடியினாலுங் காரண சரீரமும் வேண்டும். ஆகையா லதிஷ்டா
னசைதன்னியமும், பிரதிபிம்பசைதன்னியமும், சரீரத்திரயமும், இ
துகளிடத்தி லத்தியாசமுங்கூடிச் சிவனென்று சொல்லப்படும்.

ச-கை; ஈஸ்வரனாவ தாரென்னில்,
உ-ம். மாயையும் மாயா வதிஷ்டான சைதன்னியமும், மாயையிற் பி
ரதிபிம்பித்த சைதன்னியமுங் கூடி யீஸ்வரனென்று சொல்லப்
படும்.
ச-கை; இம்மூன்றுங்கூட்டி என்சொல்லவேண்டும். கேவலம் மாயை
க்கே ஈஸ்வரத்துவஞ் சொல்லுவோமே யென்னில்,
உ-ம். அப்போது ஆகாசத்திற்கு ஈஸ்வரத்வம் வரவேண்டும். அப்ப
டி கூடாததினாற், கேவலம் மாயைக்கு ஈஸ்வரத்வஞ் சொல்லக்
கூடாது.
ச-கை; ஆகாசத்திற்கு உற்பத்தி நாசமிருக்கிறபடியினால் ஈஸ்வரத்வ
ஞ் சொல்லக்கூடாமற் போனாலும், அனாதியா யிருக்கப்பட்ட மா
யைக்கு ஈஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,
உ-ம். அத்தியந்தமாகிய அபாவனைக்கும் ஈஸ்வரத்வம் வரவேண்டும்
அபாவனைக்கு ஈஸ்வரத்வங்கூடாதபடியினால், அனாதியாகிய மாயை
க்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.
ச-கை; அபாவனை பாவபதார்த்த மல்லாதபடியினாலும், மாயை பா
வபதார்த்த மாகையினாலும், மாயைக்கு ஈஸ்வரத்வஞ்சொல்லலா
மே யென்னில்,
உ-ம். சாதிகளும் பாவபதார்த்தமானதா லதுகளுக்கு மீஸ்வரத்வம்
வரவேண்டும். அப்படி வாராதபடியினால், மாயை பாவபதார்த்த
மானபோதிலு மதற் கீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.
ச-கை; மாயை யனிர்வஜன்னியமானதால், மாயைக்கு ஈஸ்வரத்
சொல்லலாமே யென்னில்,
உ-ம். அனிர்வஜன்யமான சிளிஞ்சல் வெள்ளிக்கு மீஸ்வரத்வம் வர
வேண்டும், அங்ஙனம்வாராதபடியினால் அனிர்வஜன்யமான மாயை

க்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது. இதுவுமல்லாமல் ஈஸ்வரன் சேதனனானபடியால் அசேதனமான மாயைக் கீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை; ஆனால், கேவலம் பிரதிபிம்பத்திற்கு ஈஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். மாயை யில்லாமற் பிரதிபிம்பமில்லை யாதலால், அந்தப் பிரதிபிம்பத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை; பிரதிபிம்ப நிமித்த மாயையை யங்கீகரித்துப் பிரதிபிம்பமாத்திரத்துக் கீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். மாயை யில்லாமற் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சர்வக்ஞத்வாதிகள் கூடாது. ஆனபடியினா லிந்தப் பிரதிபிம்பத்திற்கு மாத்திர மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை; அப்படியானால் அதிஷ்டான சைதன்னியத்திற் கீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். அதிஷ்டான சைதன்னியம் நிருவிகார மானபடியினாலும், கேவலம் நிருவிகார சைதன்னியத்திற்குச் செகத் சிருஷ்டியாதிகள் கூடாதபடியினாலு மதற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை; அதிஷ்டான சைதன்னியமு மாயையுங் கூட்டி ஈஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஆகாசம் ஆகாச சைதன்னிய மிரண்டுக்கு மீஸ்வரத்வம் வரவேண்டும். அப்படி யில்லாதபடியினால், மாயைக்கு மதிஷ்டான சைதன்னியத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை; மாயையும் பிரதிபிம்பமுங் கூட்டி ஈஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். இரண்டுங் கற்பிதமா யிருக்கிறபடியினால், இதற்கீஸ்வரத்வஞ் சொல்லுவோமேயானால் நித்தியத்துவஞ் சித்தியாது.

ச-கை; சித்தியாமற்போனாற் போகட்டுமே யென்னில்,

உ-ம். ஈஸ்வரனுக்கு நித்தியத்துவம் பிரதிபாதிக்கப்பட்ட சுருதியாதிகளுக்கு விரோதம் வரும். ஆதலால், மாயைக்கும் மாயாப்பிரதிபிம்பத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை; ஆனால், அதிஷ்டான சைதன்னியத்திற்கும், பிரதிபிம்ப சைதன்னியத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். கேவலம் பிரதிபிம்பமும், அதிஷ்டான சைதன்னியமும், நிரு

விகார மாகையினால், நிருவிகார சைதன்னிய மிரண்டுக்கும் விகா
ரமான ஈஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது. ஆதலால், மாயையும், அ
திஷ்டான சைதன்னியமும், மாயையிற் பிரதிபிம்பித்த சைதன்னி
யமுங் கூட்டி ஈஸ்வரத்வஞ் சொல்ல வேண்டும்.

ச-கை; இந்தப்படி ஜீவேஸ்வரனை எங்கே நிருபிக்கப்பட் டிருக்கி
ன்றதென்னில்,

உ-ம். வித்தியாரண்ணிய சுவாமிகள் பஞ்சதசப் பிரகரணத்தில் நிரு
பித்திருக்கின்றது.

இந்தப்படி ஜீவேஸ்வரனுடைய சொரூபத்தை விசாரித்தறிந்
து ஜீவேஸ்வராதிகள் மாயா கற்பிதரென்று நிச்சயித்து, இவர்களுக்
கதிஷ்டானபூதனாய், நிருவிகாரனாய், நிர்ச்சங்கனாய், நிரவயவனாய், சொ
ப்பிரகாசனாய், சர்வசாக்ஷியாய் விளங்கப்பட்ட பிரத்தியேகாத்மாவே
நானென்று ஸ்ரீ சற்குருவினால் தெளிந்து, ஜீவேஸ்வரபிம்பமும், பிம்
பப் பிரதிபிம்ப லக்ஷணமும், சுயசொரூபலக்ஷணமும், உபாதி பேத
மும், தாதாத்மிய வத்தியாச தாரதன்மியலக்ஷணங்களும், சம்சய விப
ரீதமற வெவனறிகிறானோ அவனே ஜீவன்முத்தனென்று சுருதிஸ்மி
ருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சய
மில்லை சித்தம்.

ஜீவேஸ்வரசொரூபநிருபகம்—முற்றிற்று.

---

முப்பத்தெட்டாவது.

# சித்தநிரோத நிருபகம்.

(o)

ச-கை; சித்தநிரோதமாவ தேதென்னில்,

உ-ம். மனம் ஒருநிலையாயிராமல் சகலமான பதார்த்தமா யிருக்கிற
படியினால், தன்னுடன் கூடியிருக்கிற புருஷனையு மிகவுந் தாபப்ப
டுத்தும், அதுபோய் ஒரு விஷயத்தில் விழுந்தால் அதைத்திருப்ப
வே கூடாது. மேலும், வேகமான வாயுவைத் திருப்ப வசமல்லா
துபோலும், கொலுசிலிருந்து விடுபட்டுப்போகிற மதயானையைத்
திருப்ப வசமல்லாதுபோலும், மனதையுந் திருப்பி நிறுத்த வசம
ல்லவென்று அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கேட்டதாகவும்,
சமுத்திரத்தையுங் குடிக்கலாம், மேருவையும் பிடுங்கலாம், காட்
டுத்தீயையும் விழுங்கலாம், காற்றையும் பிடித்துச் சுமையாய்க்க
ட்டலாம், சித்தநிரோதம் பெறுவது மாத்திரம் வெகு பிரயாசமெ

ன்று ஸ்ரீராமருக்கு ஸ்ரீ வசிஷ்ட முனிவர் உபதேசித்ததாகவும் கி தை வாசிட்டங்களிற் சொல்லப்படுகின்றது. அப்படி சொன்ன வசிஷ்டமுனிவரோ திரும்பவும் சித்தநிரோதம் வருவது வெகு சுல பமென்றுந் திருவுளம்பற்றியிருக்கிறார்.

இதை மறந்துவிட்டு உலகத்திற் சிலபேர் சித்தநிரோதங் கடின மென்ற வாக்கியத்தைமாத்திரம் பற்றிக்கொண்டு யாருக்குஞ் சித்தநி ரோதம் சர்வாத்மனாய் வாராதென்றே நிச்சயித்து, வேதாந்தவிசாரத் துக் கதிகாரிகளே யில்லையென்று சொல்லுகிறார்கள். ஸ்ரீசற்குருகடா க்ஷத்தினால் பிறிவுபடவறிவிக்க நன்றாயறிந்தும் பிறிந்தும் பிறிபட்ட பதார்த்தமில்லாமல் சித்தநிரோதம்வந்து முத்தரானவர்களும் அப்ப டியே உலகத்திற் சித்தநிரோதம்பண்ண வதிகாரிகளேயில்லையென்று சொல்லுகிறார்கள்; இவர்கள் சொல்லைக் கேட்டுச் சிலர் பிரமைகொ ண்டார்கள். அவர்களது பிரமையைப் போக்கடிக்கிற நிமித்தம் அவ ர்கள் நினைவின்படியே சித்தநிரோதம் வருவது வெகு சுலபமென்ப தைத் திருஷ்டாந்த பூர்வகமாய் நிருபிக்கிறோம்.

ச-கை; அதெப்படி யென்னில்,

உ-ம், மனம் பட்டிமாட்டைப்போ லொத்தது; அந்தப் பட்டிமாடு சார்வதா பயிரைக் குறித்துக்கொண்டே போகும்; பிடித்துக் கட் டப்போனால் ஓடிப்போம்; அதைப் பிரயாசத்தினால் பிடித்துக்கட் டி வீட்டுக்குள் கொண்டுவந்தாலும், அதின்முன் வைக்கோலாதிக ளைப் போட்டாலும், அதுகளை முகந்துவிட்டு முன்மேய்ந்த பயிர் களையே சிந்தித்துக்கொண் டிருக்கும்.

பிற்பாடு அவிழ்த்துவிட்டால் திரும்பவும் அந்தப் பயிரை நாடி க்கொண்டே போய் விழும்; மறுநாளு மிந்தப்படியே பிடித்துக்கட்டி, வீட்டுக்குள் வைக்கோல் தவிடு முதலானதுகள் போட்டாலும், அ தைச் சற்றுநேரந் தின்றுவிட்டுப், பிறகு எப்போதும்போ லந்தப் பயிரையே சிந்தித்திருக்கும். இந்தப்பிரகாரம் நாள்தோறும் விடுவித் தும், கட்டுவித்துத் தீனி போட்டும் பழக்கிக்கொண்டு வரவர வீட் டுத் தீண்டி யப்பியாசமாய் வெளியி லோட்டிவிட்டாலும், அது தா னே போனாலும், மறுபடியும் வீட்டுக்கே வரும். அதை யோட்டினா லும் போகாது.

அந்தப் பட்டிமாடு அப்பியாசத்தினால் வீட்டுக்குள்ளே தானே கட்டுப்பட்டதுபோல், இந்த மனதையும் அப்பியாசத்தினாலும், வை ராக்கியத்தினாலும் நிறுத்திக்கொள்ளலாம்.

ச-கை; அவ் வப்பியாசமாவ தேதென்னில்,

உ-ம். நித்தியமும் தனக்கு அபீஷ்டமான மூர்த்தியைத் தியானம்

பண்ண உட்கார்ந்தால் அம்மனம் அகமுகப்படாமல் முன்போல
வே பகிர்முகப்பட்டு விஷயங்களிற போய் விழும், அப்படி விழு
கின்ற மனதைத் திருப்பித் திருப்பி யகமுகப்படுத்தி, மூர்த்திசொ
ரூபத்தில் நிறுத்தினால் சற்றே நிற்கும், திரும்பவும் பழக்கப்படி
யே போய்விழும், மறுநா ளிரண்டுநாழிகை, மறுநாள் நாலு நாழி
கை, மறுநாள் எட்டுநாழிகை இந்தப்படியே அப்பியாசப்படுத்திக்
கொண்டு வரவர இந்த அப்பியாசத்தினால் முன் போடிய மனம்
எங்கேநிறுத்தினாலு மங்கேநிற்கும். இதுவே யப்பியாசமென்று
பெரியோர்கள் சொல்லுவார்கள்.

ச-கை; வைராக்கியமாவ தேதென்னில்,

உ-ம். அனேக ஜென்மத்திற் செய்த விகிர்த கருமங்களெல்லா மீஸ்
வரார்ப்பணமாகவே செய்து வருகிறபோது, அப்படி செய்த புரு
ஷனுக்கு ஒரு ஜென்மத்திற் சித்தசுத்திவரும். அதனா லெந்தவிஷ
யத்திலுந் தோஷ திருஷ்டி வரும்; அதனால் பிரமலோகாதிகளும்
திரணீகரமா யெண்ணுகிற திடசித்தம் வரும்; இதுவே வைராக்கி
யமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இப்படிப்பட்ட அப்
பியாச வைராக்கிய புருஷர்களுடைய சித்தம் சிரவணாதிகளி லெ
ங்கே நிறுத்தினபோதிலும் அங்ஙனே நிலையாக நிற்கும்.

ஆதலால், சித்தநிரோதம் சர்வத்திரா கூடாமற் போனபோதி
லும், ஈஸ்வரானுக்கிரகமும் குருகடாக்ஷமு முண்டானவர்களுக்கு
அப்பியாச வைராக்கியங்களினால் வெகுசுலபத்திலுண்டாகும். ஆகை
யால், வேதாந்த விசாரத்திற் சாதன சதுட்டய சம்பன்னர்களாகிய
வதிகாரிக ளில்லையென்று பிரமிக்கத்தேவையில்லை. இந்தவியாபாரத்
தில் சித்தநிரோதக் கடினத்தையுஞ் சுலபத்தையும் விசாரித்து, அப்
பியாச வைராக்கியஞ் சம்பாதித்த பூர்வகமாகவே சிரவணாதிகள்பண்
ணிச் சித்தநிரோதம் பெற்று, ஆசாரியரால் பரஞானத்தைக் கரதலா
மலகம்போற் பெற்றவனெவனோ வவனே கிருதகிருத்தியனான சீவ
ன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாசபுராணாகமாதிகளிற் சொல்
லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சித்தநிரோதநிருபகம்—முற்றிற்று.

முப்பத்தொன்பதாவது.

# தேகாத்மவைலக்ஷண நிருபகம்.

ச—கை; தேகேந்திரியாதிகளுக்கு மாத்மாவுக்கும் பேதலக்ஷணமாவ
தேதென்னில்,

உ-ம். தேகேந்திரியாதிகள் அநித்தியம், அசுத்தம், சடரூபம், துக்க

ரூபம், திரிசியம், சவிகாரம், நானாரூபம், சாபேட்சை, அப்பிரகாசம், பரிச்சின்னம், சகம்பம், ஆதேயம், சாவயவம், ஆதியந்த சகிதம், சுசாதி விசாதி சுகதபேதசகிதம், காரியம், குணம் என்றுசொல்லப்படும்.

ஆத்மாவோவென்றால், நித்தியம், சுத்தம், சித்ரூபம், சுகரூபம், திருக்கு, நிர்விகாரம், ஏகரூபம், நிராபேட்சை, பிரகாசம், அபரிச்சின்னம், நிஷ்கம்பம், ஆதாரம், நிரவயவம், ஆதியந்தரகிதம், சுசாதி விசாதி சுகதபேதரகிதம், காரணம், நிர்க்குணம் என்றுசொல்லப்படும்.

இந்தப்பிரகாரத்தில் தேகேந்திரியாதிகளுக்கு மாத்மாவுக்கு முள்ள வைலக்ஷணியங்களை ஸ்ரீ சற்குரு முன்னிலையில் நிரைநிரையாய் யூகயுத்தியினால் நன்றாய் விசாரித்தறிந்தவனெவனோ அவனே சீவன்முத்தனென்றும், திடப்பிரக்ஞனென்றும், சுருதிஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

தேகாத்மவைலக்ஷணநிரூபகம்—முற்றிற்று.

---

நாற்பதாவது.

# ஆத்மானாத்மநிரூபகம்.

—o(*)o—

ச-கை; சுருதியாதிகளில் ஆத்மானாத்மவிவேகம் பண்ணவேண்டுமென்கிறபடி ஆத்மாவாவதேதென்னில்,

உ-ம். ஸ்தூல சூக்ஷும காரண சரீரமான பஞ்ச கோசங்களுக்கும் வெதிருத்தனாய், அவஸ்தாத்திரய சாக்ஷியாய், நித்தியனாய், நிருவிகாரியாய், நிஷ்கிரியனாய், நிருபாதிகனாய், நிர்லேபனாய், நிச்சம்பந்தனாய், நிரந்தரியனாய், நிருமலனாய், அசங்கனாய், அனந்தனாய், அகர்த்தாவாய், அபோக்தாவாய், அசரீரியாய், அப்பிராணனாய், அமனசனாய், அசலனாய், அபோத சுவரூபனாய், சுவயம்பிரகாசனாய், சொப்பிரகாசனாய், சுத்தனாய், சர்வக்ஞனாய், அசித்தனாய், புண்ணியபாவத்தினாற் பரிசிக்கப்படாதவனாய், சர்வசம்பந்தனாய், சத்தியனாய், காலத்திரயத்திலும் பாத்தியனாய், பரமானந்தசொரூபனாய் விளங்கப்பட்டவனே யாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை; அனாத்மாவாவதேதென்னில்,

உ-ம். வியஷ்டி சமஷ்டி சொரூபமான தூலசூக்ஷும காரண சரீராதிப் பிரபஞ்சங்களே யனாத்மாவென்று சொல்லப்படும்.

## ஆத்மாநாத்மநிரூபகம்.

சங்கை, ஆனந்தமயகோசமாவதேதென்னில்

உ-ம், ப்ரியமோதப் பிரமோதவிர்த்திமத்தாம் அஞ்ஞான விபரிச்சி
ன்னமும் ஆகியவிவையே ஆனந்தமயகோசமென்னப்படும்,

சங்கை, பிரியமோதப்பிரமோதவிர்த்தியாவதேதென்னில்

உ-ம், இஷ்டமான வஸ்துவைப்பார்த்த மாத்திரத்தில் வந்தசந்தோஷ
மேபிரியம் அவ்வஸ்துலபித்தபின்பு வருகிறசந்தோஷமே மோதம்
அவ்வஸ்துவை யநுபவித்தபின்பு வருகிறசந்தோஷமே பிரமோத
மென்றுசொல்லுவார்கள்,

சங்கை, இவ்வஞ்ஞானத்திற்குப்பாவரூபத்வமெப்படியென்னில்,

உ-ம், நான் அஞ்ஞானிசடன்மோகிதன் அசத்தனென்று சமஸ்தபிரா
ணிகளாலும் அஞ்ஞானமநுபவிக்கப்படுகிறபடியினாலிதுவே பாவ
ரூபத்வம்,

சங்கை, திரிசியத்துவமெப்படியென்னில்,

உ-ம், சடத்துவமும் போக்கத்துவமும் நிச்சயிக்கிறபடியினாலும் காரண
சரீரமுஞ் சரீரமானதினாலுந் தூலசூக்ஷமம்போலவே சடமானபடி
யினாலுங் கடகுடியாதிகள் போலநாத்மாவாகமாட்டாத படியி
னாலும் நானஞ்ஞானி என் அஞ்ஞானமென்னை வாதிக்கின்றது என
அஞ்ஞானமுமவியின்னே தற்பமற் பண்ணுகின்றதென்று சாட்சியி
னாலறியப் படுகிறபடியினாலும் இவ்வஞ்ஞானத்திற்குத் திரிசியத்து
வமுங்கூடும இப்படிசொல்லப்பட்டயுக்தியினால் பஞ்சகோசசரீரத்
திற்கு அநாத்மத்வஞ்சித்தித்தது

இந்தச்சரீரத் திரயத்திற்கும் விலட்சணனாகிய பிரத்தியேகாத்மா
வேதானென்று முமுட்சுக்கள்நிச்சயித்துக் கொள்ளத்தக்கது, பஞ்ச
கோசாத்மகமாகிய சரீரத்திரயத்துக்கு மாத்மத்வங்கூடாதபடியினால்
தேகேந்திரியாதி விலட்சணனாகிய வாத்மாவே நானென்று ஸ்ரீசற்குரு
சந்நிதானத்தில் எவன்சந்தேகவிபரீதமின்றி விசாரித்தறிகிறானோ அவ
னே சீவன்முக்தனுஞ்சகல சாஸ்திரசம்பன்னனுமென்று சுருதிஸ்மிரு
திஇதிகாச புராணங்களாதிகளிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்
லை சித்தம்,

ஆத்மாநாத்மநிரூபகம்-முற்றிற்று,

னாற் கற்பிக்கப்பட்டிச் சொப்பனத்தையபிமானிக்கப்படுகிறபடியினாலே சொப்பன கற்பிதனென்றும் பெயர்வந்தது இந்தச் சூக்ஷுமசரீரமும் சமஷ்டிவியஷ்டிபேதத்தினாலிரண்டுவிதம்,

ச-கை. அதெப்படியென்னில்,

உ-ம். சொப்பனாவஸ்தையில் சமஷ்டி சூக்ஷுமசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவை இரணியகர்ப்பன் சூத்திராத்மா பிராணனென்று சொல்லப்படும்.

ச-கை, இம்மூன்றுபெயரேன் வந்ததென்னில்

உ-ம், ஞானசக்தியுண்டாயிருப்பதால் இரணிய கர்ப்பனென்றும நானுவித பிரபஞ்சவிதமணியினிடத்தில சூத்திரங்கோர்த்ததுபோல நானுவித பிரபஞ்சங்களிலுமனுசூதனாயிருப்பதால் சூத்திராத்மாவென்றும் கிரியாசக்தியுடன் கூடியிருப்பதினால் பிராணனென்றும் பெயர்வந்தது.

ச-கை, இனிசுழுத்தியாவதேதெனில்,

உ-ம், சமஸ்தவிஷயஞானங்களு மில்லாதிருக்கின்றதெதுவோ அதுவே சுழுத்தியவஸ்தை இவ்வவஸ்தையில காரணசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவைப் பிராஞ்ஞன் பாரமார்த்திகன் அவிச்சின்னனென்றுசொல்லப்படும்,

ச-கை, இம்மூன்றுபெயரேன் வந்ததென்னில,

உ-ம், சொப்பிரகாசசொரூபனாகையால் பிராஞ்ஞனென்றும் அவஸ்தாத்திரயத்திலனுசூதனாயிருக்கிறபடியால் பாரமார்த்திகனென்றும் தேகேந்திரியாதியுபாதியினாற் பரிச்சின்னனாகியபடியால் அவிச்சின்னனென்றும்பேர்வந்தது இந்தக்காரணசரீரமுஞ் சமஷ்டிவியஷ்டிபேதத்தினாலிரண்டுவிதம்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம். சுழுத்தியவஸ்தையில் சமஷ்டி காரணசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவை ஈஸ்வரன் அந்தரியாமி அவ்வியாகிருதன் என்றுசொல்லப்படும,

ச-கை- இம்மூன்றுபெயரேன வந்ததென்னில

உ-ம, சமஸ்தபிராணிகளையுஞ்சிருஷ்டிக்கிறபடியினாலீஸ்வரனென்றும் சமஸ்த பிராணிகளிருதயத்திலுமிருந்துபிரேரிபிக்கிறபடியினாலே அந்தரியாமியென்றும நாமரூபாதிதமாயிருக்கிறபடியால் அவ்வியாகிருதனென்றும பேர்வந்தது இதுவே வியஷ்டிசமஷ்டி சாக்கிர சொப்பனசுழுத்தியவஸ்தாத்திரயங்களு [illegible]

ச-ை. இந்தச்சரீரத்திரயங்களுக்கன்னியமாய் முப்பத்தாறுதத்துவங்களிருக்க அதுகளைச்சொல்லாமற் சரீரத்திரயங்களை மாத்திரஞ் சொன்னதென்னில்,

உ-ம். அந்தமுப்பத்தாறுதத்துவங்களுமிந்தச் சரீரத்திரயத்திலந்தர்ப்பூதமாயிருக்கிறபடியினால் இதுகளைச்சொன்னபோதே அந்தத்தத்துவங்களையுஞ்சொன்னதாயிற்று,

ச-ை, ஆயினுமமுப்பத்தாறுதத்துவங்களாவதேதென்னில்

உ-ம்; ஆகாசாதிபூதமைந்தும் சத்தாதிவிஷயமைந்தும் சுரோத்திராதிஞானேந்திரியமைந்தும் வாக்காதிகன்மேந்திரியமைந்தும் பிராணாதிவாயுக்கள்பத்தும் மனாதிநான்கும். அஞ்ஞானமொன்றும் பசுவாகியசீவனொன்றும் கூடினதுமுப்பத்தாறுதத்துவங்களென்று சொல்லுவார்கள் இந்தத்தத்துவங்களுக்கெல்லாமன்னியமாய் விளங்குவது ஜெகத்காரணபூதமாகியபரமாத்மாவான பரப்பிரமமென்றுசொல்லப்படும்.

இந்தமுப்பத்தாறுதத்துவமுமிருபத்துநான்கு தத்துவத்திலந்தர்ப்பூதமென்று நிச்சயித்து இருபத்துநான்கு தத்துவமென்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது இப்படிசொல்லப்பட்ட அவஸ்தாத்திரயங்களையுஞ் சரீரத்திரயங்களையும் ஸ்ரீ சற்குருமுன்னிலையிலவிசாரித்து அகண்டசச்சிதானந்த சொரூபமாகியபிரத்தியகாத்மாவே நானென்றறிகிறவனெவனோ அவனை பிரமவித்தென்று ஸ்ருதிஸ்மிருதியிதிகாச புராணாதிகளிற சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்,

அவஸ்தாத்திரயநிரூபகம்-முற்றிற்று

---

நாற்பத்திரண்டாவது.

## பிரளயசொரூபநிரூபகம்.



ச-ை. பிரளயசொரூபமாவதேதென்னில்

உ-ம், நித்தியப்பிரளயம் அவாந்தரப்பிரளயம் தினப்பிரளயம் பிரமப்பிரளயம் ஆத்தியந்தப்பிரளயமென்றைந்துவிதமாயிருக்கும்,

களுக்கே இகபரசவுக்கியமுண்டென்றும் புத்திரனில்லாதவர்களுக்
கு இகலோகபரலோக துக்கமுண்டென்று சொல்லியிருக்கிறார்கள்
அதைக்கேட்டயதார்த்தமென்றெண்ணிப் பிரமைகொண்டவர்களு
டையபிரசங்கிக்கும்படி புத்திரனுண்டானவர்களுக்கே துக்கங்க
ளென்றுசொன்ன பிரபலசுருதிவாக்கியங்களை விசாரித்து முமுட்சு
வானவர்கள் அந்தபுத்திராதிகளிடத்தில் பிரியங்களைவிட்டுவிட்டு
ஆத்மசொரூபமாகியதன்னிடத்திலேயேபரம பிரீதியாய் சதாவிஷ்ட
னாயிருக்கவேண்டுமென்று பெரியோர் சொல்லுகிறபடியினாலே புத்தி
ரனுண்டானவர்களுக்கதிகதுக்கமென்ப தெப்படியென்னில்,

உ-ம், புத்திரனில்லாத தாய்தந்தைகள் புத்திரசோகங்கொண்டு சாஸ்தி
ரிகளையழைத்து சுவாமீ எங்களுக்குப் புத்திரனில்லாமையாற்கெதி
யில்லையென்றுபுராணாதிகளிற் சொல்லுகின்றதே அந்தத்தோஷம் நீங்
கப்புத்திரனுண்டாகும் வகைசொல்லவேண்டுமென்று கேட்க,

அவர்களும சந்தோஷகரமாய் நீங்கள்புண்ணிய தீர்த்தயாத்திராதி
விரதாதிகளையனுஷ்டித்தீர்களானாலுங்களுடைய பாவநீங்கிப்புத்திரோ
ச்சவமுண்டாகுமென்று சொல்லஅந்தப்படியே தீர்த்தயாத்திரைமுதலி
யவிரதாதிகளைப்பிரயாசையுடனனுஷ்டித்தும் புத்திரனுண்
டாகாமையினாலுந்துக்கம் அப்படியிருக்கத் தெய்வகதியாய் ஒருகாலத்திற்
கெர்ப்பமுண்டாகி அஃது அந்தர்மசமயத்தினாற் சேதப்பட அதனாலுந்
துக்கமே, திரும்பவுந்தெய்வகதியாய்க் கெர்ப்பந்தரித்துப் பத்துமாதஞ்
சென்றபிறகு பிரசவகாலத்திலுந்துக்கம், பிரசவித்தபிறகு மந்திராதி
ஔஷதாதித்தேவதாதிப்பிரார்த்தனைகளினாலுந் துக்கப்பட்டவர்களாய் புத்
திராம்பட்டையினாற் பிராணஹானியெங்கே நேரிடுகிறதோவென்றுபய
ப்படுவதினாலுந்துக்கம், மாந்தம் சுரம் பட்சிதோஷமுண்டாகிலேனு
ம்சதாதுக்கம், இதுகளுக் கெல்லாந்தப்பிப்பிழைத்தால் வித்தையாப்பி
யாசாதிகளினால்துக்கம், அப்படிவித்தைகவந்தபின்னும விஷயவிச்சைச
மபந்தாதிதுர்நடத்தைகளினாலதிகதுக்கம்,

பின்னும் விவாககாரியாதிசெலவுகளினாலும் அப்படிவிவாகமா
கிக் குழந்தைகளதிகரித்து கஷ்டப்படுவதினாலுந் துக்கம் ஒரு
வேளை தரித்திரநீங்கியயிசுவரியம் வந்தகாலத்திலும் இந்தப்புத்திர
னுடையஐசுவரியயாரோக்கிய சம்பத்தைக் கூடவிருந்தனுபவியாம
ல் தாய்தந்தைகளாகிய நாம் செத்துப்போகிறோமே யென்பதினா
லுந்துக்கம் இந்தப் பிரகாரம் புத்திரனுண்டானவர்களுக்குச் சாஸ்

ச-ங்கை, அதெப்படியென்னில.

உ-ம், ஒருபுருஷனொரு தகாத காரியஞ்செய்ய அதற்கு ராஜன் கண்களை மூக்குகளையறுக்கத்தொடங்கினால் அப்போது தனதங்கத்திலே தாவதறுக்கக்கொடுத்து இந்திரியங்களைத்தப்பித்துக்கொள்ளுகிறபடியினால் சரீரத்திலுமிந்திரியமே பிரியமாகும் இவ்விந்திரியத்திலும் பிராணனே பிரியம்,

ச-ங்கை, அதெப்படியென்னில்

உ-ம், ஒருபுருஷன்குற்றஞ்செய்து அவனையரசன் பிராணச்சேதம் பண்ணத்தொடங்கினால் இந்திரியங்களையாவது கொடுத்துப்பிராணனைத் தப்பித்துக்கொள்ளுகிறபடியால் இந்திரியத்திலும்பிராணனே பிரியமாகும இந்தப்பிராணனிலும் ஆத்மாவேபிரியம்

ச-ங்கை. அதெப்படியென்னில்.

உ-ம் ஒருபுருஷன் தான்தேவனாகவேண்டுமென்று பரலோகத்தையிச்சித்துக்கங்காப்பிரவேசம் பண்ணிப்பிராணனை விடுகிறபடியினால் பிராணனிலும ஆத்மாவேபிரியமாகும்,

இந்தப்படி ஸ்ரீ சற்குருநசந்நிதானத்தில் நன்றாய் விசாரித்துப் புத்திரமித்திரகளத்திராதிதேகேந்திரிய பிராணாதிகளுக்குத்துக்கசொரூபமென்றறிந்து அதுகளிடத்திலிருக்கிறபிரியாபிமானங்களை விட்டுவிட்டு நீங்காப்பிரியத்துவமாகிய வாத்மாவேதானென்று அவ்வாத்மாவினிடத்திலெப்போதும் பிரியம்வைத்திருக்கிறவனெவனோ அவனே ஜீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதியிதிகாசபுராணங்களிற்சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்,

பிரியத்துவநிருபகம்-முற்றிற்று.

நாற்பத்தைந்தாவது.

## மகாவாக்கிய நிருபகம்.



ச-ங்கை. சுருதியாதிகளில் மகாவாக்கியஜன்னியஞானமே ஞானமென்றும் மற்றஞானமெல்லாங் குஞ்ஞான மென்றுஞ் சொல்லுகிறபடியினால் மகாவாக்கியமாவதேதெனில்,

உ-ம, கூர்மையானபுத்திசாதகமிருந்தால் மோட்சலட்சுமியையெளிதிற்கூடலாம் உலகத்தில் யாருக்காகிலும் பிரயாசையில்லாமல் புழுதியிலமிழ்ந்து கிடக்கிறமாணிக்கமகப்பட்டால் அதைப்பத்தனம் பண்

சொல்லுகின்றவுபதேசக்கிரமமெப்படி. தம்மை வந்தடுத்த சீடனது பக்குவத்தைத் திரேதிரேபரிக்ஷித்து அதிதீவிரபக்குவனென்று ணர்ந்து உத்தேசம் இலக்கணம் சோதனை யென்கிற மூன்றுவகையாகவும் மகாவாக்கியத்திற்கு அவனையாசஞ்சிதகன் மையனுக்கிரகஞ்செய்யும்படி திருவுளங்கொண்டு ஆமைபோற்றிருவுள்ளத்திற் சிந்தித்து மமெல்லாம் அடியோடறும்படி மீனைப்போற் றிருபாதிருஷ்டியைத் ஆகாமியகன்மமெல்லாநீங்கும்படி பறவைபோல் து பிராரத்தகன்மமும்பிராரப்தசமாய் நமிக்கும்படி விதிவிசேஷதாதிதமா அஸ்த மஸ்தகசையோகஞ்செய்து பஞ்சகவசமிட்டு மகாவாக்கியார்த்தத்தையுபதேசஞ் செய்தருளினார்.

சு-௱௪, ஆனால் அத்தியாரோபமாவதேதென்னில்,

உ-ம், ரச்சுசுத்திகை ஸ்தாணுவாதியில்கிரமத்தி லில்லாத சர்ப்பரஜிதசோராதிகற்பிதம்போற் சத்ருபப்பிரமத்திலில்லாத மாயாப்பிரபஞ்சகற்பிதமேஅத்தியாரோபம்.

சு-௱௫. அபவாதமாவதேதென்னில்.

உ-ம். இதுசர்ப்பமல்ல ரச்சுவே இதுரசிதமல்லகிளிஞ்சலே இதுசோரனல்லஸ்தாணுவே யென்றறிவிப்பதுபோலும் ஒருவிருட்சத்தில் இலை பூ பிஞ்சு காய்பழம்பட்டை நார் வேரிவை வெம்புருசிகளாகிய இதுவன் பேதமாளுலுங் காரணமாகியவித்து ஒன்றே யென்றறிவிப்பதுபோலும் இதுபிரபஞ்சமல்ல பிரமமேயென்றறிவிப்பது அபவாதமாகும்,

சு-௱௬. ஆனால் அதத்துவாவிருத்திலட்சணையாவதேதென்னில்,

உ-ம்; தேகாதியனாத்மவர்க்கங்களையுத்தியினால் நேதிபண்ணுகின்ற ஆத்மனையறிவிப்பதே அதத்துவாவிருத்திலட்சணை,

சு-௱௭. தடஸ்தலட்சணையாவதேதென்னில்,

உ-ம், விருட்சத்தின்மேல் சந்திரனிருப்பா னென்பதுபோலப்பூதாதி ஜெகத்காரணங்கொண்டு ஆத்மனையறிவிப்பதே தடஸ்தலட்சணை,

சு-௱௮, சொரூபலட்சணை யாவதேதென்னில்

உ-ம், பிரகாசசொரூபமே சூரியனென்பதுபோல ஆத்மாவினிஜ சொரூபமறிவிப்பதே சொரூபலட்சணை யென்று சொல்லப்படும் இதுவு

மல்லாமல் அந்தமகாவாக்கியார்த்த விசாரத்தினாலுண்டாகிற கூடஸ்த
பிரமாயிக்யஞானமே மோட்சமென்று சகலவேதாந்த சாஸ்திரங்களி
லும் சொல்லப்படுகின்றது பெரியோர்களுடையவனுபவமும் நமது
சுவானுபவமும் அதுவேயாகும்,

ச-கை, ஆனாலடியேனுக்கு அந்தமகாவாக்கியத்தையுபதேசித்துக்கூட
ஸ்தபிரமாயிக்யஞானத்தையுண்டாக்கி சம்சயவிபரீதமறும்படியனு
க்கிரகஞ்செய்தருளவேண்டும் ஆயினும் அதற்கு மகாவாக்கியமென்
றசிலாக்கியமெனவந்ததென்னில்,

உ-ம், வேதத்தில்விதிவாக்கியம் நிஷத்தவாக்கியம் அவாந்தரவாக்கியம்
ஆப்தவாக்கியமென்று சொல்லப்படுகிற வாக்கியசதுஷ்டயத்தில ஆப்த
வாக்கியம் அவாங்மனோகோசரமாயிருக்கிறசைதன்யவஸ்துவைக்கர
தலாமலகம்போற்காட்டுகிற படியினால்அதற்கு மகாவாக்கியமென்
று பெயராயிற்று,

ச-கை, மற்றமூன்றில்விதிவாக்கியமாவதேதென்னில்.

உ-ம், பிராமணனைக்குறித்து, காலமூன்றிலுமனுஷ்டான சந்தியாவந்த
னஞ்செய மானவபரிசுத்தம அக்கினிகோத்திரமுமபண்ணவேணுமெ
னகிறது-விதிவாக்கியம்.

ச-கை, நிஷத்தவாக்கியமாவதேதென்னில,

உ-ம், சுபாசுபங்களைப்பண்ணக் கூடாதென்கிறது நிஷத்தவாக்கியம்

ச-கை- அவாந்தரவாக்கியமாவதேதென்னில்,

உ-ம், ஜோதிஷ்டோமாதிகளைப்பண்ணினவனுக்குச் சொர்க்காதிபல
னுண்டாகுமென்றது அவாந்தரவாக்கியம் இம்மூன்றுவாக்கியமும்
அதுபோலப்பிரத்தியேகாத்மசொரூபத்தைத் தெரிவிக்கமாட்டாது
ஆகலால் அதற்குமகாவாக்கியமெனபது பிரமாணசித்தமே.

ச-கை, காண்டத்திரயமென்று சுருதிகளிற் சொல்லப்படுகிறதேதென்
னில்,

உ-ம். கன்மம்உபாசனைஞானம் மூன்றுவிதமாயிருக்கும்,

ச-கை, கன்மகாண்டமாவதேதென்னில்,

உ-ம், வேதபுருஷனுடையநாபிக்குக் கீழ்ச்சொர்க்கலோக பரியந்தங்கன்
மகாண்டம்,

ச-கை, உபாசனைகாண்டமாவதேதென்னில்,

சிச்சொருபநிச்சயஞ்செய்து, அதைமனத்திற்சிந்தித்தத தரிபடுதே மனனமென்னும் அங்ஙனமனனஞ் செய்தபொருளைச் சுவானுபூதியிற்காட்சிப்படுவதே நிதிதியாசனமென்னும் சொல்லப்படும் இந்தச்சிரவணாதிகளினால் தான் அந்தப்பொருள் விளங்கப்படும்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், சிரவணமானது காரியகாரணவுபாதிகளைநீக்கிச் சிவனிதுபானிதுவென்னக்கேள்வியினாற்றெரிசிக்கப்பண்ணும்

ச-கை, அஃதெவ்வாறென்னில்,

உ-ம், காரியவுபாதியென்பது சீவவுபாதி அதற்குவாக்கியம் சங்சர்க்கவாக்கியமெனறுசொல்லப்படும்,

ச-கை, அதெப்பாடியென்னில்,

உ-ம், மஞ்சாக்குரோசந்திகங்காயாம்கோஷப்பிரதிவசதிஎன்பது,
ச-கை, அதற்கார்த்தமேதென்னில்,

உ-ம், மஞ்சங்கூப்பிடுகிறதென்றும் கங்கைசத்திக்கிறதென்றுஞ் சொல்வது அப்படி சொல்லுமிடத்துமஞ்சம் சடம் அதுகூப்பிடமாகூப்பிடவறியாது மஞ்சத்திலுளொருபுருஷனிருந்து கூப்பிட்டானென்றறியவேண்டிற்று, கங்கையாவது ஜடம் அது சடமாதலால கோஷிக்கவறியாது அதன்கரையிலிடைச்சேரியிருக்கிறதென்றுகொள்ளவேண்டிற்று, இதுபோலேயுபாதிக்குஞ்சீவனைசாட்சியாய்நின்றுசேட்டிப்பிக்கிறதென்றறியவேண்டியதுஇதாவிட்டலக்கணை,

ச-கை, காரணவுபாதியேதென்னில்,

க-ம், காரணவுபாதியென்பது பரவுபாதிஅதற்கு வாக்கியம்விசிட்டவாக்கியமென்றுசொல்லப்படும்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், சுரோணத்திஷ்டஇசுவேதோதாவதி-என்பது,

ச-கை, அதறகர்த்தமேதென்னில்,

உ-ம், ஒருசிவப்புக்குதிரையும் வெள்ளைப்பசுவுங் கண்டாயோவென்பது, அப்படிசொல்லுமிடத்து சிவப்புனிறக்கிறது வெள்ளை போகிறதென்றால் சிவப்புனிறமவேறுபட்டுக் குதிரையன்றித் தனியேயனில்லாதுவெள்ளைனிறம் வேறுபட்டுப்பசுவையன்றித்தனியேபோகாது ஆகலால சிவப்புனிறமுள்ளகுதிரை னிற்கிறதென்றும் வெள்ளைனிறமுள்ளபசு போகிறதென்றுங் கொள்ளவேண்டிற்று இது

போல, சர்வஞ்ஞத்வாதிகாரணோபாதியாகிய காரியத்தை விடாமல்
பரனேசாட்சியாய்நின்று சீவனும்பரனுமன்னியமாகாமல்' மகாமா
யையினால் அன்னியோன்னிய ஏகமாயிருக்கிறதென்றறிய வேண்
டியது-இதுவிடாதலக்கணை,

ச-கை, அசிபதமாவதேதென்னில்

உ-ம், மனைத்திலற்றவிருவகைப் பொருளையுங்காட்டியி லயிக்கம்பண்
ணுவதே அசிபதம அதற்குவாக்கியம்அகண்டவாக்கிய
ல்லப்படும்.

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், சோயம்தேவதத்தகா வென்பது

ச-கை-அதற்கர்த்தமேதென்னில்,

உ-ம், அவனேயிவன் இவனே அவனென்பது அப்படி சொல்லுமிடத்
துச்சர்வசராசரப்பிரபஞ்சமுந்தன்வடிவாகக்கண்டு விளங்கிய பரன்
எல்லாந்தானாய் விளங்குகிறானென்பதுமறந்து தன்னையுமிழந்து
பரமார்த்தமாய்சாந்தமானவுபசாந்தத்தையயிக்கமென்றறியவேண்டி
யது இது விட்டுவிடாதலக்கணை.

ச-கை, நாலுவேதத்திலும் ஞானகாண்டத்தில்நான்கு உபநிஷத்திலி
ருந்துநான்குமகாவாக்கியமுண்டாயிற்றென்பதெப்படியென்னில்.

உ-ம். இருக்குவேதத்தில் அயித்திரியவுபநிஷத்திற்பிரஞ்ஞானம் பிரம
மெனனும்வாக்கியமும் யசுர்வேதத்தில்தைத்திரியவுபநிஷத்தில் அ
கம்பிரமாஸ்மியென்னும் வாக்கியமும்சாமவேதத்தில் சாந்தோக்கிய
வுபநிஷத்தில் தத்துவமசியென்னும் வாக்கியமும் அதர்வணவேதத்
தில்மாண்டூக்கியவுபநிஷத்தில் அயமாத்மாப் பிரமமென்னும்வாக்
கியமுமுண்டாயிற்று இந்நான்குவாக்கியமும்பதினொருபதமாயிற்று.

ச-கை, சீவபரங்களுக்கயிக்கியத்தைப் பிரதிபாதிக்கிறதற்கு ஒருவாக்
கியம்போதாதோ நாலுவாக்கியமேதுக்கென்னில்.

உ-ம், இந்நாலுவாக்கியங்களிலும்பிரயோசனமுண்டு

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், தத்துவமசிவாக்கியம் குருவின் உபதேசவாக்கியமும் அகம்பிர
மாஸ்மிவாக்கியம் சீஷனனுபவவாக்கியமும் பிரஞ்ஞானம்பிரமமென்
னும் வாக்கியம் லட்சணவாக்கியமும் அயமாத்மாப்பிரமமென்னும்
வாக்கியம் சாட்சாத்காரவாக்கியமுமாகும்.

ச-ஙை, இதுகளுக்கர்த்தமெப்படியென்னில்,

உ-ம். வாக்கியங்களுக்குக்காரணம்பதமும் பதார்த்தமுமாதலால் பூர்வம் சாமானியமாய் விசாரித்திருந்தபோதிலும் இன்னும் விசேஷமாகவே விசாரிக்கப்படவேண்டும்,

ச-ஙை, ஆனால் பதமும்பதார்த்தமுமாவதேதென்னில்

உ-ம், தொம்பதம் தத்பதம் அசிபதம் எனமூன்றுபதம், தொம்பதார்த்தம் சீவன் தத்பதார்த்தம் ஈஸ்வரன் அசிபதார்த்தம ஐக்கியம் இதுவே பதார்த்தமென்றுசொல்லப்படும்

ச-ஙை, தொம்பதார்த்த பூதனானசீவசொரூபமேதென்னில,

உ-ம், அவித்தையும் அதிஷ்டானசைதன்னியமும் சைதன்யகற்பிதமான அபஞ்சீகிருதபூத காரியலிங்க சரீரமும் அதிற்பிரதிபிம்பித்தசிதாபாசனும் சிதாபாச தர்மமான கிஞ்சிக்ஞத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகளுங்கூடிச்சீவசொரூபமென்று சொல்லப்படும்.

ச-ஙை. தத்பதார்த்தபூதனானபரசொரூபமேதென்னில்

உ-ம், மாயையும் அதிஷ்டானசைதன்யமும் அதிற்பிரதிபிம்பித்தஈஸ்வரனும் ஈஸ்வரதர்மமான சர்வஞ்ஞத்வாதிகுணங்களுங்கூடி ஈஸ்வரசொரூபமென்றுசொல்லப்படும்

ச-ஙை, அசிபதசொரூபமேதென்னில்,

உ-ம். கூடஸ்தனைபிரமம் பிரமத்தை கூடஸ்தனென்னும் ஐக்கியார்த்தமாயறிவதே அசிபதசொரூபமென்றுசொல்லப்படும்.

ச-ஙை, ஆனால்கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற சீவனுக்குஞ்சர்வக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற ஈஸ்வரனுக்கும் ஐக்கியமெப்படிகூடும் இப்படி விரோதமான அர்த்தத்தைச் சுருதிகளிலெப்படி சொல்லுகின்றது இதுகளைச்சந்தேகவிபரீதமற அடியேனுக்குப்போதித்தருளவேண்டுமென்னில்,

உ-ம், முன்சொல்லிய லட்சணத்திரயங்களில விட்டலட்சணையாகிய ஜகர்லட்சணையிற் சொல்லுகிறோம் நீ சாவதானமாய்க்கேள்.

ச-ஙை, அதெப்படியென்னில்

உ-ம், கெங்காதீரத்திலிருந்தொரு பிராமணன்வர அவனைக்கண்டமற்றொருபிராமணன் சுவாமீ கெங்காதீரத்தில்விசேஷமென்னவென்று கேட்கஅந்தப் பிராமணன் கெங்காயாங்கோஷவதியென்றான்

ச-ஙை, அதற்குத்தாற்பரியமேதென்னில்,

மகாவாக்கியநிருபகம்,

உ-ம், கங்கையென்கிற பதத்திற்குப்பிரவாகம் அர்த்தமாகையினால்
பிரவாகத்தி லிடைச்சேரியிருக்குமென்று கொள்ளப்படாது அப்படி
கொள்ளுமிடத்துப்பிரத்தியட்ச விரோதமாயிருக்கும் ஆதலால் க
ங்கைக்கர்த்தமான பிரவாகத்தைச் சர்வாத்மனாய்விட்டுவிட்டு அப்பி
ரவாகத்தோடுங்கூடியிருந்த கரையினிடத்தில் இடைச்சேரி யிருக்கிற
தென்று கொள்ளுவதே தாற்பரியமாயிற்று

சங்கை, ஆனாலிந்தப்படியேமகாவாக்கியத்திலுஞ்சகர்லட்சணைசொல்ல
லாமாவென்னில்,

உ-ம், சொல்லப்படாது

சங்கை, அதேனென்னில்.

உ-ம், தொம்பதார்த்த பூதனான கூடஸ்தசைதன்னிய பரியந்தமும் வி
ட்டுவிட்டால முமுட்சுக்கள் சொரூபமேயில்லாமற் போகின்றது அ
தனால்பிரத்தியட்ச விரோதம்வரும் ஆதலால்இந்த ஜகர்லட்சணைகூ
டாது

சங்கை, ஆனாலந்த லட்சணைத்திறு லெந்தவாக்கியம பிரமத்தைப்போ
திக்கின்றதென்னில்,

உ-ம், அன்னமயகோசமுதல் விஞ்ஞானமயகோச மட்டும் இந்தநாலு
கோசமும் பரப்பிரமமென்கிற வாக்கியத்திற்குச் சடமானகோசங்
கள்அதுகள்பிரமமல்லாதபடியினாலதுகளை விட்டுவிட்டு அதுகளுக்க
திஷ்டானபூதமான சைதன்னியத்தினிடத்திலே-தாற்பரியம்

சங்கை, ஆனால் அஜகர்லட்சணையாவதேதென்னில்

உ-ம், மஞ்சாக்குரோசந்தி யென்கிறவாக்கியத்தில் மஞ்சங்கூப்பிடுகிற
தென்று அர்த்தமாகின்றது அந்தஅர்த்தத்தை யங்கீகரித்தால்பிரத்
தியட்ச விரோதம்வரும் ஆதலால் மஞ்சத்தைவிடாமல் அதிலிருக்
கும்புருஷன் கூப்பிடுகிறானென்று கொள்ளுகிறதேதாற்பரியம் இப்
படிபோலவேதத்தில் சத்தியஞானமனந்தமென்னும் வாக்கி
யத்தில் ஆனந்தமயத்துடன் கூடியிருக்கிறவாத்மாவுக்குச் சச்சிதா
னந்தலட்சணத்தைவிடாமல் ஆனந்தமயகோசத்தைச் சொல்லுகி
ன்றது.

சங்கை, ஆனாலிந்த அர்த்தத்தை மகாவாக்கியத்திலங்கீகரிக்கலாமேயெ
ன்னில்

உ-ம், அப்படியங்கீகரிக்கப்படாது

சங்கை, அதெப்படியென்னில்

௨-ம்; கிஞ்சிஞ்ஞத்வாதிகுணங்களுடன் கூடியிருக்கிறசைதன்னியமே ஜீவன் ஆகையினுல்குண விசிஷ்டனுனவனுக்கு ஐயிக்கியஞ்சொல்லக் கூடாது ஆதலாலிந்த அஜகர்லட்சணையுங்கூடாது

௪-வகை, ஜகதஜகர்லட்சணையாவதேதென்னில்

௨-ம், சோயந்தேவதத்தகா என்கிறவாக்கியத்தில் கங்காதீரத்தில்அஞ் சாமவருஷம் தேவதத்தனைப் பார்த்தோம் அவனையே இந்தக்காவேரிதீரத்தில் ஐம்பதாம் வருஷங்கண்டோமென்கிற வியவகாரத்தில்அந் தத்தேசமும் அந்தக்காலமும் இந்தத்தேசமும்இந்தக்காலமும் ஆகியபுருஷனைவாச்சியார்த்தமென்றங்கீகரித்தோமானுல்வெகுவிரோத முண்டாகிறபடியென்றால் கங்காதீரங்காவேரிதீரமாகாது காவேரிதீ ரங் கங்காதீரமாகாது அந்தக்காலமிந்தக்காலமாகாது இந்தக்கால மந் தக்காலமாகாது அதனுலபிரமாணாந்தரமான பிரத்தியட்சனுக்கு வி ரோதமாயிருக்கின்றது ஆதலால அந்தத்தேசம்அந்தக்காலம்இந்தத் தேசம இந்தக்காலமாகிய வாச்சியார்த்தத்தைவிட்டுவிட்டு லட்சியா ர்த்தரூபமானதேவதத்தனையறிந்துகொள்வதே தாற்பரியம்.

அதுபோலமகாவாக்கியத்தில்தற பதவாச்சியார்த்தமான மாயைக் கும்மாயாப் பிரதிவிம்பனுனஈஸ்வரனுக்கு சர்வஞ்ஞத்வாதி குணங்களுக் கும் தொம்பத வாச்சியார்த்தமான அவித்தைக்கும அவித்தையாப்பிர திவிம்பனுன சிதாபாசனுக்கு கிஞ்சிஞ்ஞத்வாதி குணங்களுக்கும்அன்னி யோன்னிய ஐயிக்கியம் அங்கீகரித்தால் பிரத்தியட்சவிரோதம்வரும

ஆதலால விரோதமானமாயா சர்வஞ்ஞத்வாதி குணங்களும் அவித் தையாகிய கிஞ்சிஞ்ஞத்வாதி குணங்களுமாகிய இருவகையுந் தள்ளிவிட்டு விம்பத்தோற்றமொக்கமும விம்பப்பிரதி விம்பத்தோற்றமொக்க முமஅஞ்ஞானமும் அஞ்ஞானகாரியத் தோற்றமொக்கமுமறிவித்து லட்சியபூதமானசைதன்னிய மாத்திரத்தைப்பற்றிச் சச்சிதானந்தபிர மமேநீயேஅந்தச் சச்சிதானந்த பிரமமென்று மகாவாக்கியத்தில ஜக தஜகர்லட்சணையினுல போதிக்கப்படுகின்றது.

ஆதலால்நீயேபிரமம் உன்னுடைய சித்தவிருத்தியில்நீயேயனுதா னித்துப்பார்க்கவேண்டும இதிற்சம்சயமில்லை இவற்றுள் வாச்சியார்த் தம் இலட்சியார்த்தமென்னுமிருவகையில வாச்சியார்த்தமங்கீகரித்தா லல்லவோபிரத்தியட்ச விரோதமாய்த் தோற்றுகின்றதோ அங்கேலட்சி யார்த்த மங்கீகரிக்கவேண்டும் ஆனபடியினுல மகாவாக்கியலட்சணைத் திறலயிக்கியம் போதிக்கப்படுகின்றதென்று லட்சணையையங்கீகரிக்கத்த க்கது ஆயினுமிந்த மகாவாக்கியத்தையே[illegible]ப்படி இன்னமொருபிர காரமாய உனக்கு யுக்தியினமையும்படி போதிக்கின்றோம்,

# மகாவாக்கியநிருபகம்,

ச-கை, அஃதெப்படியென்னில

உ-ம், இருக்குவேதத்தில பிரஞ்ஞானம்பிரமமென்கிறவாக்கியத்தில்பி
ரஞ்ஞானமென்றும்பிரமமென்று மிரண்டுபதம்

ச-கை, பிரஞ்ஞானபதத்திற்கர்த்தமேதென்னில்

உ-ம், வாச்சியார்த்தம்லட்சியார்த்த மென்றிரண்டுவிதம் அவற்றில்வா
ச்சியார்த்தமானது பிரத்தியோகாத்மாவின்சாயை அந்தக்கரணத்திற்
பிரதிபிம்பித்துதற்பிரகாசத்தையகங்காரனுக்குக் கொடுத்துஅகங்
காரதர்மத்தைத் தான்மேல் போட்டுக்கொண்டுசித்துஞ் சடமுமாய
ன்னியோன்னியவத்தியாசத்தைப் பண்ணிக்கொண்டுதபதாயபின்
டம்போல நான்கர்த்தாபோக்தாசுகிதுக்கியெனறபிமானிக்கிறபோது
சிதாபாசனுக்குமகங்காரனுக்கும சகசதாதாத்மியமென்றுஞ் சிற்சட
க்கிரந்தியெனறுஞ்சொலலப்படும்.

ஸ்தூலசரீரத்தையத்தியாசம்பண்ணிக்கொண்டு அதனைதுஷடபா
வவிகாரங்களெல்லாந்தனக்கேற்பட்டுக்கொண்டு உண்டானேன் பி
றந்தேன் வளர்ந்தேன்பருத்தேனிளைத்தேன்நசித்தேன் கறுப்புசிவப்
புகுட்டை நெட்டையென் றபிமானிக்கிறபோது சிற்சாயையகங்கார
னுக்கும் ஸ்தூலசரீரத்திற்கும்கர்மஜதாதாத்மிய மென்றுசொல்லப்ப
டும்,

சரீரதர்மங்களெல்லாம்சாட்சியினிடத்தாரோபிக்கும்போது அவ்
வகங்காரனுக்குஞ்சாட்சிக்கும பிராந்திஜதாதாத்மியமென்றுசொல்லப்
படும் இப்பிரகாரம சரீரத்திரயத்திற்கூடியிருக்கிற சிதாபாசனஞாது
ருஞானஞேயமாகிய திரிபுடிவியாபாரம்பண்ணுவன்.

உ-ம, அந்தக்கரணபிரதிபிம்ப சைதன்னியமேசிதாபாசன் அவனையே
ஞாதுருவென்றும் அவனவிருத்தியுடன் கூடும்போது ஞானமென
றும அவனவிஷயங்களுடன் கூடும்போது ஞேயமென்றுஞ்சொலலப்
படும்இந்தத்திரிபுடியுடன் கூடியிருக்கிறசிதாபாசனே தசேந்திரியவி
யாபாரத்தைச்செய்வன்

யாதொருசைதன்னியம அந்தக்கரணவிருத்தியோடு கூடிச்சுரோ
த்திரேந்திரியத்துவாரசத்தங்களை யெல்லாமறிகின்றதுஅதுவேதொ
க்கிந்திரியத்துவாரபரிசங்களையுஞ்சட்சிந்திரியத்துவாரரூபங்களையும்
சிங்ஙுவையிந்திரியத்துவாரரசங்களையும கிராணேந்திரியத்துவாரகந்
தங்களையும் வாக்கிந்திரியத் துவாரவசனங்களையும் பாதேந்திரியத்து
வாரகமனங்களையும் பாணீந்திரியத்துவார தானங்களையும் பாயுரிந்

தியத்துவாராமல் விசர்க்கத்தையும் உபஸ்தேந்திரியத்துவாரா ஆனந்தத்தையும் அறிகின்றது இப்படிகர்மேந்திரியவியாபார விஷயங்களையறிகிற சீவனையேவாச்சியார்த்தமென்றுசொல்லப்படும்.

ச-கை. அதெப்படியென்னில்

உ-ம், லட்சியார்த்தப்பிம்பம் வாச்சியமகங்காரத்திற் பிரதிபலித்து இரண்டுங்கூடினபோது லட்சியமாகியசாட்சியசலனற்றிருக்க அகங்காரத்தொழிற் படுகிறதேவாச்சியார்த்த மென்னப்படும்

ச-கை, இனிலட்சியார்த்தமேதென்னில்.

உ-ம். அவ்வந்தக்கரணத்தையும் அதுகளின் விருத்திகளையும் தேகேந்திரியாதி வியாபாரங்களாகியவாச்சியத்தையுந் தள்ளி மஞ்சாக்குரோசவிலட்சணம்போல அவஸ்தாத்திரயசாட்சியாய்கூடஸ்தனாய் நிர்விகாரியாயிருக்கிற பிரத்தியேகாத்மசைதன்னியமேலட்சியார்த்தமென்றுசொல்லப்படும்

ச-கை. இனிபிரமபதத்திற்குவாச்சியார்த்தமேதென்னில்.

உ-ம்; உத்தமமாயிருக்கிற இந்திராதிதேவதைசரீரங்களிலும் மத்திமமாயிருக்கிறமனுஷாதி சரீரங்களிலும் அதமமாயிருக்கிறபசுவாதிசரீரங்களிலும அபஞ்சீகிருத பூதபஞ்சீகரண பூதங்களிலும் யாதொருசைதன்னியமானது ஏகமாயிருக்கின்றதோ அதுவே வாச்சியார்த்தமென்றுசொல்லப்படும்.

ச-கை. லட்சியார்த்தமாவதேதென்னில்.

உ-ம். மாயாகாரியங்களனைத்தையுந்தள்ளி விட்டுப்பிரபஞ்சவிலட்சணமாய்பிரபஞ்சவதிஷ்டானமாய்மாயாதற்காரியாதீதமாய்திரிவிதபரிச்சேதசூனியமாய்சர்வத்திரா அநுகதமாயிருக்கிறபரமாத்மசைதன்னியந்தானே லட்சியார்த்தமென்று சொல்லப்படும் அதேபிரத்தியேகாத்மாவாயிருக்கிறகூடஸ்தசைதன்னியம் அதுதானென்னிடத்திலிருக்கிற பிரக்ஞை இப்பிரக்ஞையே பிரமாவினிடத்திலுமிருக்கிறது பிரமாவினிடத்திலிருக்கின்ற பிரக்ஞைதானென்னிடத்திலுமிருக்கிறது ஆதலால் சைதன்னியமென்றாலும் பிரக்ஞானமென்றாலும் பிரமமென்றாலும் ஆத்மாவென்றாலும் பேர்மாத்திரம் வேறேயல்லாமல் வஸ்து ஒன்றானபடியினாலேலக்ஷமென்கிற பதத்தினாலயிக்கியஞ்சொல்லப்பட்டது,

ச-கை. யசுர்வேதத்தில் அகம்பிரமாஸ்மியென்னும் பதத்தில் அகமென்கிறபதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம், பரிபூரணமாய்தேசகாலவஸ்துபரிச்சேத சூனியமாயிருக்கிறபிரத்தியேகாத்மசைதன்னியந்தானேபிரமவித்தைக்கதிகாரியாயிருக்கிற

## மகாவாக்கியநிரூபகம்.

மனுஷசரீரத்தில் புத்திக்குச்சாட்சியாயிருதயகமலத்தில் அகமென்மெ
ன்றுஸ்மரித்துக்கொண்டிருக்கும்

சங்கை, ஆனால்பரிபூரணமாயிருக்கிற வாத்மாவுக்குத் தேகசம்பந்த
சொல்லுகையினால் பரிச்சின்னத்துவமுவாரதோவென்னில்

உ-ம், சூட்சமசரீரவிலட்சணமாயிருக்கிற படியினாலேபரிச்சின்னத்வமா
கியபரிபூரணமென்பதிற்சம்சயமில்லை

சங்கை, சூனியபூரணத்தைப்போலேயோவென்னில்,

உ-ம், சூனியபூரணம்போலன்று சுதாபூரணமென

சங்கை, அதெப்படியென்னில்,

உ-ம், அகமென்னும்போது சைதன்னியம்அக்கிர்விசாரமானகையினாலக
மென்றுவிகாரஞ் சொல்லக்கூடாது அகங்காரஞ்சடமானகையாலிதுவு
மகமென்று தோற்றமாட்டாது பதமோவென்றால்பரமாத்மபூகமா
னசைதன்யமே அகங்காரத்துடன் கூடிக்கொண்டகமென்றுவிளங்
குகின்றது ஆனபடியினால்சடமான வு ச்சியத்தைத்தள்ளிச்சைதன்
யமாத்திரமே அகமென்கிறசப்தத்திற்குலட்சியார்த்தமென்று சொல்
லப்படும்.

சங்கை, பிரமபதத்துக்கர்த்தமேதென்னில

உ-ம், சுதாஎப்போதும்பூரணமாய் தனக்குமுந்தியொருவஸ்துவுங் காரண
மாயில்லாமல் தனக்குப்பிந்தியொருவஸ்துவுங்காரியமாயில்லாமல் த
னனிடத்திலொருவஸ்துவுமில்லாமல் தனக்கன்னியமாய் ஒருவஸ்து
வுமில்லாமல்யாதொரு சைதன்னியம்ஏகமாயிருக்கின்றதோ அதுதா
ன்பிரமபதத்துக்கு லட்சியார்த்தம்

சங்கை, அஸ்மியென்கிறபதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம், அவ்விருபதத்தின் லட்சியார்த்தவயிக்கியமே அஸ்மியென்னும்
பதார்த்தமென்றுசுருதியிற்சொல்லப்படுகின்றது,

சங்கை, சாமவேதத்தில் தத்துவமசி வாக்கியத்தில் தத்பதத்திற்கர்த்த
மேதென்னில்,

உ-ம், ஏகமேவாத்வைதம்பிரமமென்று சொல்லப்படும்,

சங்கை, ஏகமென்றால் போகாதோ ஏகமேவாத்வைதம் பிரமமென்று
சொல்லுவானேனென்னில்

உ-ம், ஏகமென்பதிற் சுசாதி சூனியமும்ஏவவென்பதில்விசாதி சூனி
யமும் அத்வைதமென்பதில் சுவகத பேதசூனியமும் விளங்குகி
ன்றது அதனால் அப்படி சொல்லவேண்டிற்று,

சங்கை, உலகபதார்த்தங்களிற் சுசாதிவிசாதிசுவகதபேதங்கள் பிரத்
யட்சமாக விளங்கப்படுகின்றது எப்படியென்றால் விருட்சங்களெ
ல்லா மேகமாயிருந்தாலும் ஆலமரம்அரசமரம் என்கிறபேதமிருக்கி
றபடியால் சுசாதிபேதமும்-பாஷாணாதிகள் விருட்சங்களுக்கன்

னியமாயிருக்கிறபடியால் விசாதிபேதமும்-பத்திரபுஷ்ப பலாதிகள்
விருட்சத்திற்குப் பேதமாய்த்தோற்றுகிறபடியால் சுவகதபேதமுங்
கண்டோம்-அதுபோல ஆத்மாவிலும் அந்தப்பேதங்கள் கண்டோம்,
எப்படியென்றால் ஒருவஸ்துவில் ஜீவனென்றும ஈஸ்வரனென்றும்
பேதமிருக்கிறபடியால் சுசாதிபேதமும் ஜீவேஸ்வரரைப் பார்க்கி
லும் சடப்பிரபஞ்ச மன்னியமாயிருக்கிறபடியினால் விசாதிபேதமும்
சச்சிதானந்த குணங்களிருக்கின்றபடியால் சுவகதபேதமுங்கண
டோமேயென்னில்

உ-ம், ஒருவஸ்துதானேயபின்னமாய் நிமித்தவுபாதானகாரணமாயிருந்
துக்கொண்டு தான்தானே சிருஷ்டித்துத்தான்தானே பிரவேசித்ததெ
ன்று சுருதிசொல்லுகிற படியினால் ஜீவேஸ்வரபேதமாகிய சுசாதி
பேதமில்லை-ஜீவேஸ்வரரைப் பார்க்கிலுஞ் சடப்பிரபஞ்சத்திற்குச்
சுதாசத்தையில்லாதபடியினால் சுத்திகாரசிதம் சொப்பனப் பிரபஞ்
சம ரச்சுசர்ப்ப முதலானதுகளைப்போல மித்தையாபூதமாய் வாதிக்
கப்படுகின்றது ஆதலால் விசாதிபேதமில்லை ஆத்மாவுக்குச் சச்சி
தானந்தமெல்லாஞ் சொரூபமாயிருக்கிறபடியினால் சுவகதபேதமில்
லை ஆனபடியினாலாத்மா சுசாதிசுவகதவிபேதரகிதசொரூபமென்று
தத்பதத்துக்கர்த்தமாயிற்று,

ச-கை, இனி-தொம்பதத்திற்கர்த்தமேதென்னில்

உ-ம், தேகேந்திரியாதிகளுக்கெல்லா மதீதமாய் சிரவணமனனநிதித்
தியாசனத்துடன்கூடியிருக்கிற பிரத்தியேகாத்தும சைதன்னியமே
தொம்பதத்திற்கர்த்தமென்றுசொல்லப்படும்,

ச-கை, அசிபதத்திற்கர்த்தமேதென்னில்

உ-ம், அவ்விருபதத்தின் லட்சியார்த்த வயிக்கியமேஅசியென்னும்ப
தத்திற்கர்த்தமென்றுசொல்லப்படும்

ச-கை, அதர்வணவேதத்தில் அயமாத்மாப்பிரமமென்னும் வாக்கியத்
தில் அயமென்னும்பதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம், ஆத்மாஅபரோட்சசொரூபமென்றுசொல்லப்படுவது,

ச-கை-ஆத்மா அபரோட்சசொரூபமானால் கடாதிகளைப்போல் திரிசிய
மாய்க்காணப்பட்டுச் சடமாயிற்றேயென்னில்,

உ-ம், திரிசமமாய்க்காணப்பட்டுச் சடமாயிருக்கிறதுமல்ல,

ச-கை, சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாததோ
வென்னில்

உ-ம், சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாததும
லல் ஆதலால அந்தநித்தியா பரோட்சசொப்பிரகாச சொரூபத்

